# மாணிக்கச் சோதிட சேகரம்

ஆசிரியர்
சி. மாணிக்கம்
கணிதமறை கலைஞர்

வெளியீடு
சி. மாணிக்கம்
கணிதமறை கலைஞர்
கரிகாலி போஸ்ட் 621 210
முசிரி தாலுக்கா, திருச்சி ஜில்லா

# மாணிக்கச் சோதிட சேகரம்

ஆசிரியர்
சி. மாணிக்கம்
கணிதமறை கலைஞர்

வெளியீடு
*சி. மாணிக்கம்*
கணிதமறை கலைஞர்
கரிகாலி போஸ்ட் 621 210
முசிறி தாலுக்கா, திருச்சி ஜில்லா

ஜீன் 1995

விலை ரூ. 15

# மாணிக்கச் சோதிட சேகரம்

ஆசிரியர்: சி.மாணிக்கம், வெளியீடு: சி.மாணிக்கம், கணிதமறை கலைஞர், கரிகாலி போஸ்ட் - 621 210, முசிறி தாலுக்கா, திருச்சி மாவட்டம், (பக்: 78, விலை ரூ.15/-)

தசா புத்தியினால் வரும் நோய்கள் என்னென்ன, எப்படிப்பட்ட கிரக அமைப்பு இருந்தால் உண்மையை மறைத்துப் பேசுவதில் சமர்த்தர்களாக இருப்பர், அண்ணன் இருக்க தம்பிக்கும், அக்காள் இருக்க தங்கைக்கும் விவாகம் நடக்கும் தோஷம் பற்றியும், என்பது போன்ற மற்ற ஜோதிட நூல்களில் குறிப்பிடாத பல விஷயங்களை நூலில் தந்துள்ளார்.

தமது ஜோதிடத் தொழிலில் பார்த்த பல ஜாதகங்களை நன்கு ஆராய்ந்து அவற்றின் அடிப்படையில் இந்நூலை எழுதியுள்ளார். கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது என்பது போல நூல் சிறிதாக இருந்தாலும் நல்ல பல விஷயங்களை கொண்டதாக உள்ளது.

— ஆராய்ச்சிமணி.

# முன்னுரை

சோதிடம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் பல சோதிட நூல்களை வாங்கி ஷட் வர்க்கக்கணிதம் அஷ்ட்டவர்க்கக்கணிதம் முதலியவற்றை யாருடைய உதவியுமின்றி நானாகவே கணிதம் செய்து சோதிட நூல்களில் போடப்பட்டுள்ள பாவகப் பலனில் இன்னகிரகம் இந்த இடத்திலிருந்தால் இன்ன பலன் நடக்கும் என்றும் இன்ன நூலில் கூறப்பட்டுள்ளது என்றும் முன்னோர்கள் கூறியுள்ளார்கள் என்றும் எழுதியுள்ளார்களேயன்றி அதன்படி பலன் நடக்கிறதா என்று ஆராய்ந்து எழுத வில்லை. திசாபுத்தி பலனிலும் சுபர்களின் புத்தியில் நல்ல பலனும் பாபர்களின் புத்தியில் தீய பலனும் நடக்கும் என்று பொதுவாகக் கூறப்பட்டுள்ளதே தவிர தெளிவான விளக்கங்கள் எதுவும் கூறப்படவில்லை. இதன் படி பலன் கூறும் போது எதுவுமே ஒத்துவரவில்லை. பிறகு திருச்சியில் உள்ள நாடி சோதிடர் அம்பிகை பாலன் திரு. பொ. சிவப்பிரகாசனாரிடம் சென்று நாடி நூல் எடுத்துப் பார்த்தேன். அவர் கந்தர் நாடி எடுத்துப் படித்தார். அதில் இவன் சோதிடம் கற்று தொழிலாகக் கொள்வான் என்று கந்தன் கூறினார். இதற்கு உமாமகேஸ்வரி இவன் சோதிடம் கற்பான் என்று கூறியதன் காரணம் என்ன என்று கேட்டார். அதற்குக் கந்தன் இவன் சாதகத்தில் தொழில் ஸ்தானாதிபதி புதனோடு கூடி 5 ல் நின்று வாக்காதிபதி குருபார்ப்பதால் தானம்மா அவ்வாறு கூறினேன். சிலது காலம் இவரிடம் வந்து விளக்கங்களை தெரிந்து கொள்ள வேண்டும் என்று வந்தது. அதன்படி அடிக்கடி அவரிடம் சென்று அடுத்தவருக்கு நாடி படிக்கும் போது கூறும் பலன்களைக் கேட்டு தெரிந்து கொண்டேன். அப்போது ஒருவர் தனது தந்தைக்கு உடல்

நலம் சரியில்லை என்று நாடி பார்க்க வந்தார். அவரது லக்கினம் சிம்மம் 6ல் சனி சூரியன் நின்று சனி திசை சூரிய புத்தி சனி அந்தரம் நடந்து கொண்டிருந்தது. நாடியில் அரிமா ஆவி கொண்டோனுக்கு அப்பன் தானத்திற்கு கருமத்திற்குடையன் திசையில் கருமத்திலிருப் பவன் புத்தியில் கருமத்துக்குடையவன் அந்தரத்தில் உன்னைப் பெத்தவன் தப்பிட முடிந்திட்டாதப்பா என்று கூறியது. அதன் படி அவர் தந்தை இறந்து போனார். இதன்படி ஒவ்வொருவருக்கும் கடந்த காலத்தில் நடந்து வந்த பலன்கள் எதனால் நடந்தது என்று ஆராய்ந்து வருங்காலத்தில் இப்படித்தான் நடக்கும் என்று சொல்லி நடந்து வந்ததையும் சேகரித்து மாணிக்கச் சோதிடசேகரம் என்று பெயரிட்டுள்ளேன். நாடி நூல்களில் ராசியின் கிரக நிலையைக் கொண்டே பலன் கூறி வருவதாலும், புலிப்பாணி முனிவர் கேளப்பாராசி பனிரெண்டுக்குள்ளே கனமுள்ள கோள் நிலையை அறியாமல் தான் பாளப்பா பலவாறாய் சக்கரம் போட்டு என்ற பாடலில் ராசிச்சக்கரத்தின் கிரகநிலையைக் கொண்டே பலன் கூறலாம் என்று கூறியுள்ளார். ஆதலால் ராசியின் கிரக நிலையைக் கொண்டே பலன்களை எழுதியுள்ளேன். புதிதாகச் சோதிடம் கற்று தொழிலாகக் கொள்பவர்களுக்கும் தொழிலாகக் கொள்ளாதவர் களுக்கும் அவரவர்களின் வாழக்கையில் நடக்கும் பலன்களை முன்னமே தெரிந்து கொண்டு தீய பலன் வரும் போது அதைத் தடுத்து கொள்ளவும் நல்ல பலன் கொடுக்கும் போது சேமித்து வைத்துக்கொள்ளவும் பேருதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

ஆசிரியர்
சி. மாணிக்கம்
கணித மறை கலைஞர்.

அகிலாண்டேஸ்வரி துணை

# மதிப்புரை

மாணிக்கச் சோதிட சேகரம் என்ற இந்த நூலை இயற்றிய ஆசிரியர் திரு மாணிக்கம் அவர்கள் 1967ல் என்னிடம் நாடி பார்க்க வந்தார். அவருக்கு கந்தர் நாடியை எடுத்துப் படித்தேன். அதில் அவர் சாதகத்திலுள்ள கிரக நிலைகளைக் கூறி இந்த மைந்தனின் கோள் நிலைப்படி தசத்தாதி பஞ்சமத்தில் புந்தியோடு நின்று வாக்காதி அந்தனன் நோக்குவதால் வாக்குக்கனித வித்தை கற்றிடுவான். இன்னது காலம் புந்தியின் திசையில் சுங்கனின் பொசிப்பில் இந்த மறைதனை நோக்குகின்றான். புந்தியின் திசையில் பிந்தப் பகுதி கந்தனின் புத்தி தொட்டாக கணிதமறைதனில் தேர்ச்சி பெற்று அந்தப் பகுதியிலுள்ளோர்களின் விதியதை ஆய்ந்துரைக்கும் பணிதனில் மதியதை செலுத்தி நிதியதைப் பெறுவான். அன்னது கால மட்டாக இந்த மறைதனை எடுத்து ஓதுவானோடு சிலது காலம் ஒட்டியிருந்து உனது கணித பாக சங்கைக்கு விளக்கமது கண்டிட வேண்டுமேயப்பா என்று பாடலில் வந்தது. அதன்படி அடிக்கடி வந்து அடுத்தவர்களுக்குப்படிக்கும் போது கவனமாகக் கேட்டு தெளிவு பெற்று சோதிடத் தொழிலில் ஈடுபட்டுபலசாதகங்களை ஆராய்ச்சி செய்து அனுபவத்தில் நடந்து வந்தவை் களைவைத்து எளிதில் புரிந்து கொள்ளும் படியாகவும் சுருக்கமாகவும் இந்த நூலை இயற்றியுள்ளார். கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகுத்தி குறுகத்தறித்த குறள் என்று திருக்குறளைப் பற்றி கூறுவது போல அனுவைத் துளைத்து ஈரேழ் அகிலத்தைப் புகுத்தி குறுகக் கணித்த மறை என்று கூறலாம் துன்பம் வருவதற்கு முன்னமேகண்டறிந்து வரும் துன்பத்தைப் போக்கி இன்பமாக வாழந்திட வழி காட்டும் நூலாக அமைந்துள்ளது.

அம்பிகைபாலன்
பொ. சிவப்பிரகாசனார்
நாடிசோதிடர்
பிள்ளையார்கோயிலுக்கு அருகில்
19, வரகனேரிபஜார்,
திருச்சி-8

No 13A பருப்புக்காரத்தெரு
பாலக்கரை திருச்சி1.

## புதிதாகச் சோதிடம் கற்றுக்கொள்பவர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான விபரங்கள்

. பஞ்சாங்கம் ஒன்றை வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும். ந்தப் பஞ்சாங்கத்தில் உள்ள தமிழ் வருடம் பிரபவ முதல் அட்சய வரை 60 வருடங்களையும் அசுவனி முதல் ரேவதி வரை 27 சத்திரங்களையும் பிரதமை முதல் பவுர்ணமி வரை 15 திதிகளாகும். இதை வளர்பிறை பூர்வ பட்சம், சுக்கிலபட்சம் என்று கூறுவார்கள். வுரணமிக்குப் பின் பிரதமை முதல் அமாவாசை வரை அதே திதிகள் ான் வரும் இதை தேய்பிறை கிருஷ்ணபட்சம் அமரபட்சம் என்று கூறுவார்கள். இந்த 15 திதிகளையும் விஷ்கம்பம் முதல் வைதிருதி ாமயோகம் வரை 27 யோகங்களையும் பவம் முதல் கிம்ஸ்துக்கினம் வரை 11 கரணங்களையும் படித்து மனப்பாடம் செய்து கொள்ளவேண்டும்.

. ஒரு திதிக்குறிய மொத்த நாழிகை வினாடியில்முன்பாதிக்கு ஒரு கரணமும் பின்பாதிக்கு ஒரு கரணமுமாகவரும் ஒரு திதிக்கு 2 கரணங்களாகும் பஞ்சாங்கத்தில் அன்றைய திதியின் இருப்பு நாழிகை 50 வினாடி 30 வரை உள்ளது என்றால் அந்தத்திதியின் முன் பாதிக்குறிய கரணத்தை மட்டும்தான் போட்டிருப்பார்கள் பின் பாதிக்குறிய கரணத்தைப் போடமாட்டார்கள். இதைப்போலவே அன்றைய திதி இருப்பு நாழிகை 10 வினாடி 30 என்றால் அந்தத்திதிக்குறிய கரணத்தை மட்டும்தான் போட்டிருப்பார்கள். அடுத்த திதியின் கரணத்தைப் போட மாட்டார்கள். ஜனனமான நேரத்திற்கு எந்தக்கரணம் வருகிறது என்று பார்த்துச் சாதகத்தில் எழுத வேண்டும்.

## 2. பஞ்சாங்கத்தில் உள்ள மற்ற விபரங்கள்

பஞ்சாங்கத்தில் அந்தந்த மாத ராசியின் நாழிகை வினாடியை முதல் தேதியன்று போட்டிருப்பார்கள் பிறகு அந்தமாத ராசியின் நாழிகை வினாடிகளை வினாடியாக்கி அந்த மாதத்திற்கு எத்தனை தேதி வருகிறதோ அதனால் வகுத்து வந்த வினாடி சுமார்

9 அல்லது 10 வினாடி வரும் இதை ஒவ்வொரு தேதிக்கும் குறைத்துப் போட்டிருப்பார்கள். ஜனனமான தேதியன்று உள்ள ராசியின் இருப்பை வைத்து ஜனனமான நேரத்திற்கு லக்கனத்தைக் கணிதம் செய்ய வேண்டும்-அடுத்து தியாஜ்யம் இதைதிஎன்று போட்டு நாழிகை வினாடியைப் போட்டிருப்பார்கள். அந்த நேரத்திற்கு மேல் 4 நாழிகை வரை சுபகாரியங்களைச் செய்யக்கூடாது. அடுத்து ராமா என்று போட்டுள்ள நாளில் பகலிலும் சுபகாரியங்கள் செய்யக்கூடாது. அடுத்து ஜயந்தி என்பது விஷ்னுவின் அவதாரங்களையும் மகான்களின் பிறந்த தினத்தையும் குறிக்கும். அடுத்து திருதினஸ்பிருக் என்று போட்டிருப்பார்கள். இது ஒரு திதி 3 நாளைக்கு தொடர்ச்சியாக இருப்பதாகும்-அடுத்து அவமா என்று போட்டிருப்பார்கள். இது ஒரே நாளில் 3 திதிகள் வருவதாகும்-அடுத்து அதிதி அதிகதிதி திதித்துவயம் என்று போட்டிருப்பார்கள். இது பிதுர்திவசம் கொடுப்பவர்களுக் குறியதாகும். அதிதி என்பது முதல்நாள் பகல் 12 மணி முதல் அன்று பகல் 12 மணி வரை ஒருதிதி வருவது இது திவசம் கொடுக்க யோகமில்லாத திதியாகும். அதிக திதி என்பது திவசம் கொடுக்க வேண்டி திதி ஒரு மாதத்தில் 2 வருவதாகும். இவ்வாறு வந்தால் சென்ற வருடம் திவசம் கொடுத்த தினத்திலிருந்து 12 ஆவது மாதம் பூர்த்தியாகும் தினத்தன்று வரும் திதியன்று திவசம் கொடுக்க வேண்டும். திதித்துவயம் என்பது முதல் நாள் பகல் 2 மணி முதல் அன்று பகல் 2 மணி வரை வருவதாகும். இவ்வாறு வந்தால் 2 நாளில் ஏதாவது ஒரு நாளில் திவசம் கொடுக்கலாம்.

## 3 பிரதோஷம்.

பிரதோஷம் என்பது ஒவ்வொரு மாதத்திலும் வளர் பிறையிலும் தேய்பிறையிலும் துவாதசி அல்லது திரயோதசி திதியன்று வரும் அன்று விரதமிருந்து நந்தி தேவருக்கு அர்ச்சனை செய்து வணங்கி வந்தால் சகல தோஷங்களும் நிவர்த்தியாகும் என்பதாம்.

. தனிஷ்ட்டா பஞ்சமி

தனிஷ்ட்டா பஞசமி என்று போட்டு 14 நட்சத்திரங் களைப்போட்டு ஒவ்வொரு நட்சத்திரங்களுக்கும் எத்தனை மாதங்கள் என்று போட்டிருப்பார்கள். அந்த நட்சத்திரங்களில் மரணம் அடைந்தவர்களுக்கு அந்த நட்டத்திரத்திற்குறிய மாதங்கள் வரை அடைப்பு அல்லது அவிட்டம் உள்ளது என்பார்கள். ஒவ்வொரு மாதமும் அந்த நட்சந்திரம் வரும் நாளன்று அவர்களின் ஆவி வந்து போகும் என்று அன்றைக்கு மட்டும் அந்த வீட்டில் யாரும் படுத்துறங்காமல் வீட்டை பூட்டிவிடுவார்கள். ஒவ்வொரு மாதமும் அந்த நட்சத்திரம் பகலில் ஆரம்பித்து இரவு முழுதுமிருந்தால் ஒரு நாளைக்கும் இரவு மணி 10½ முதல் மறுநாள் இரவு மணி 1½ வரை அந்த நட்சத்திரமிருந்தால் 2 நாளைக்கு அந்த வீட்டில் படுக்கக்கூடாது.

5. ராகுகாலம்.

ராகுகாலத்தை பஞ்சாங்கத்தில் போட்டிருப்பார்கள். இது திங்கட்கிழமை காலை 7½ மணிக்கு ஆரம்பித்து திங்கள் சனி வெள்ளி புதன் வியாழன் செவ்வாய் ஞாயிறு வரை வரிசை கிரமமாக நாள் ஒன்றுக்கு 1½ மணி வீதம் கூடிக் கொண்டே வந்து ஞாயிறு மாலை 6மணிக்கு முடிவாகும். காலை 6மணி முதல் 7½ வரையிலும் இரவிலும் ராகு காலமில்லை. இதைச் சுலபமாகத் தெரிந்து கொள்ள வேண்டு மாயின் திருவிழா-சமயத்தில்- வெய்யிலில்-புரண்டு- விளையாட- செல்வது-ஞாயமா இதிலுள்ள ஒவ்வொரு வாக்கியத் திலும் உள்ள முதல் எழுத்தை அந்தந்த கிழமைகளின் முதல் எழுத்தாகப் பாவித்து வரிசை கிரமமாக கணக்கிட்டு ராகு காலத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

6. எம கண்டம்

எமகண்டம் வியாழக்கிழமை காலை 6½ மணிக்கு ஆரம்பித்து நாள் ஒன்றுக்கு 1½ மணி வீதம் கூடிக் கொண்டே

வியாழன் புதன் செவ்வாய் திங்க ஞாயிறு சனி வெள்ளி வரை இடது பக்கமாக வந்து வெள்ளி மாலை 4½ மணிக்கு பகல் எம கண்டம் முடிவாகும். இரவு எம கண்டம் ஞாயிற்றுக்கிழமை மாலை 6மணிக்கு ஆரம்பித்து இடது பக்கமாக நாள் ஒன்றுக்கு 1½ மணி வீதம் கூடிக்கொண்டே வந்து திங்கள் காலை மணி 4½ க்கு முடிவாகும். காலை மாலை மணி 4½ முதல் 6வரை எம கண்டமில்லை

## 7. குளிகை காலம் இதை குளிசம் என்றும் கூறுவார்கள்

பகல் குளிசம் சனிக்கிழமை காலை 6மணிக்கு ஆரம்பித்து எம கண்டத்தைப் போலவே இடது பக்கமாக நாள் ஒன்றுக்கு 1½ மணி வீதம் கூடிக்கொண்டே வந்து ஞாயிறு மாலை 4½ மணிக்கு முடிவாகும். இரவு குளிசம் செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு ஆரம்பித்து இடது பக்கமாக நாள் ஒன்றுக்கு 1½ மணி வீதம் கூடிக்கொண்டே வந்து புதன் காலை 4½ மணிக்கு முடிவாகும் காலை மாலை மணி 4½ மணி முதல் 6 மணி வரை குளிகைகாலமில்லை.

ராகு காலம் எம கண்டம் உள்ள காலத்தில் சுபகாரியங் களை செய்யக்கூடாது. குளிகை காலத்தில் சுபகாரியங்களைச் செய்யலாம் குளிகை காலத்தில் நடக்கும் காரியங்கள் அபிவிருத்தியடைந்து வரும் குளிகை காலத்தில் சவ அடக்கம் இறுதிச்சடங்கு திவசம் கொடுத்தல் முதலிய காரியங்களைச் செய்யக்கூடாது. குளிகை காலத்தில் ஒருவர் இறந்து போனால் அவரின் நெருங்கிய உறவினர்களில் ஒருவர் 6 மாதத்துள் இறந்து போவார்கள் என்று கூறுவார்கள். இறந்த நேரத்திற்கும் சவ அடக்கம் செய்யும் நேரத்திற்கும் இடையில் குளிகை காலம் வந்தால் யாரும் அழமாட்டார்கள் மேளம் கொட்ட மாட்டார்கள். மேளம் கொட்டி அழுது கொண்டிருந்தால் அந்த வீட்டில் 6 மாதத்துள் அழுகுரலும் மேளசத்தமும் கேட்கும் என்று கூறுவார்கள்.

**8. 12 ராசிகளின் பெயர்கள்**

1 மேஷம் 2 ரிஷபம் 3 மிதுனம் 4 கடகம் 5 சிம்மம் 6 கன்னி 7 துலாம் 8 விருட்சிகம் 9 தனுசு 10 மகரம் 11 கும்பம் 12 மீனம். ராசி என்பதும் லக்கினம் என்பதும் ஒன்றுதான். ஜனனமான நேரத்திற்கு எந்த ராசி வருகிறதோ அதை லக்கினம் என்றும் சந்திரன் நின்ற ராசியை ராசி என்றும் கூறுவார்கள். திசாபுத்தி பலன் கூறுவதற்கு லக்கினத்தைக் கொண்டும் பத்திரிக்கைகளில் வரும் ராசிபலனை சந்திரன் நின்ற ராசிலயக் கொண்டு பலன் கூற வேண்டும்.

**9. கிரகங்களின் ஆட்சிஉச்சம்பகை நட்பு நீச வீடுகள் பற்றிய விபரம்.**

பஞ்சாங்கத்தில் ஒவ்வொரு கிரகத்திற்கும் ஆட்சி வீடு உச்ச வீடு நட்புவீடு பகைவீடு நீசவீடு பற்றி ஓர் அட்டவணைப் போட்டிருப்பார்கள். இதைப் பார்த்து அவசியம் மனப்பாடம் செய்து ஞாபகத்தில் வைத்துப் கொள்ள வேண்டும். பலன் கூறும் போது இதை அடிக்கடி உபயோகிக்க வேண்டி வரும். ராகு கேது தவிர மற்ற கிரகங்களுக்கு ஆட்சி வீடு உண்டு. அது அந்த கிரகத்தின் சொந்த வீடாகும். அந்த வீட்டின் அதிபதியுமாவார் லக்கினாதிபதி ராசி அதிபதி ஸ்தானாதிபதி என்பது யாவும் அந்த வீட்டின் ஆட்சி கிரகங்களைத்தான் குறிக்கும். உச்ச விட்டில் நிற்கும் கிரகத்திற்கு 1 1/4 பெலம் ஆட்சி வீட்டிற்கு 1 பெலம் நட்பு வீட்டிற்கு 3/4 பெலம் பகை வீட்டிற்கு 1/2 பெலம் நீச வீட்டிற்கு 1/4 பெலமுடையவர்களாவார்கள். நீசம் பெற்று நின்ற வீட்டிற்குடையவர் ஆட்சி உச்சவீடுகளில் நின்று அந்த வீடுகள் லக்கினத்திற்கோ சந்திரன் நின்ற ராசிக்கோ 1-4-5-7-9-10 ஆம் வீடாக வந்தால் நீசபங்கம் உண்டாகிறது. நீசம் பெற்ற கிரகத்திற்கு முழுபெலம் உண்டாகும்.

**10. சத்துரு மித்துரு சம கிரகங்கள்.**

ஒவ்வொரு கிரகத்திற்கும் சத்துரு அல்லது பகை மித்துரு அல்லது நட்பு சமம் என்பது நட்பு பகை இல்லாத கிரகங்களாகும்

| கிரகங்கள் | மித்துரு | சத்துரு | சமம் |
|---|---|---|---|
| சூரியனுக்கு | சந்-செவ்-குரு | சுக் சனி ராகே | புத |
| சந்திரனுக்கு | சூரி-புத | ராகு கேது | செவ் குரு சுக் சனி |
| செவ்வாய்க்கு | சூரி-சந்-குரு | புத | சுக் சனி ராகு கேது |
| புதனுக்கு | சூரி-சுக்-ராகு-கேது | சந் | குரு-செவ்-சனி |
| குருவுக்கு | சூரி-சந்-செவ் | புத சுக் ராகு கேது | சனி |
| சுக்கிரனுக்கு | புத-சனி-ராகு-கேது | சூரி சந் | குரு-செவ் |
| சனிக்கு | சுக்-புத-ராகு-கேது | சூரி சந் செவ் | குரு |
| ராகுவுக்கு | குரு-சுக்-சனி | சூரி சந் செவ் | புத |
| கேதுவுக்கு | செவ்-சுக்-சனி | சூரிசந் | புத-குரு |

## 11. கிரகபார்வை

கிரகங்களின் நின்ற ராசியை ஒன்று என்று கணக்கிட்டு பார்வை ஸ்தானங்களை அறிய வேண்டும். சூரியனும் சனியும் அவர்கள் நின்ற ராசியிலிருந்து 3-7-10 ஆமிடத்தைப்பார்கும் சந்திரனும் புதனும் 7ஆமிடத்தையும் செவ்வாய் 4-7-8ஆமிடத்தையும் குரு 5-7-9 ஆமிடத்தையும் சுக்கிரன் 6-7-8 ஆமிடத்தையும் பார்ப்பார்கள். ராகு கேது 3-7-11 ஆமிடத்தை இடது பக்கமாகப் பார்ப்பார்கள்

## 12. கிரகசாரங்கள்

ஜனனகாலத்தில் லக்கினம் எந்த நட்சத்திரத்தில் அமைந்துள்ளதோ அந்த நட்சத்திரத்திற்குரிய திசாநாதன் யாரோ அந்த கிரகத்தின் சாரத்தில் லக்கினம் இருப்பதாகவும் மற்ற கிரங்கள் எந்த நட்சத்திரத்தில் சஞ்சாரம் செய்கிறார்களோ அந்தக் கிரகத்தின் சாரத்தில் சஞ்சாரம் செய்கிறார்கள் என்பதாம்.

13. நட்சத்திர சாரநாதர்கள்

அசுவணி மகம் மூலம் கேதுசாரம்
பரணி பூரம் பூராடம் சுக்கிரசாரம்
கார்த்திகை உத்திரம் உத்திராடம் சூரியசாரம்
ரோகிணி அஸ்த்தம் திருவோணம் சந்திரசாரம்
மிருகசீரிடம் சித்திரை அவிட்டம் செவ்வாய்சாரம்
திருவாதிரை சுவாதி சதயம் ராகுசாரம்
புனர்பூசம் விசாகம் பூரட்டாதி குருசாரம்
பூசம் அனுஷம் உத்திரட்டாதி சனிசாரம்
ஆயில்யம் கேட்டை ரேவதி புதன்சாரம்

14. கேந்திரம், திரிகோணம் மறைவிடஸ்தானங்கள்

1-4-7-10 ஆமிடம் கேந்திரஸ்தானம் சுபஸ்தானம்
1-5-9 ஆமிடம் திரிகோமஸ்தானம் சுபஸ்தானம்
2-11 ஆமிடம் சமபெலஸ்தானம்
3-6-8-12 மறைவிடஸ்தானம் அசுபஸ்தானம்

15. 12 லக்கினங்களுக்கும் பாபர்சுபர்கள்

மேஷ லக்கினத்திற்கு

சூரியன் சந்திரன் குரு சுபர்கள் சூரியன் குருயோகர்கள் சுக்கிரன் புதன் சனி பாபர்கள் புதன் சனி மாரகள் அல்லது மரணத்தைக் கொடுப்பவர்கள்

ரிஷப லக்கினத்திற்கு

சூரியன் புதன் சனிசுபர்கள் செவ்வாய் குருபாபர்களும் மாரகர்ககளுமாவார்கள்.

## மிதுன லக்கினத்திற்கு

சுக்கிரன் புதன் சுபர்கள் குருவும் சனியும் கூடியிருந்தால் யோகத்தைக் கொடுப்பார்கள் சனி செவ்வாய் குரு பாபர்களும் மாரகர்களுமாவார்கள்.

## கடக லக்கினத்திற்கு

செவ்வாய் குரு சுபர்கள் செவ்வாய் யோகர் புதன் சுக்கிரன் சனி பாபர்களும் மாரகர்களும் ஆவார்கள்.

## சிம்ம லக்கினத்திற்கு

சூரியன் செவ்வாய் சுக்கிரன் சுபர்கள் செவ்வாய் சுக்கிரன் யோகர்கள் குரு ஓர் பாகம் சுபர் ஓர்பாகம் பாபர் சனி பாபரும் மாரகருமாவார்.

## கன்னியாலக்கினத்திற்கு

புதன் சுக்கிரன் சனி சுபர்கள் புதன் சுக்கிரன் யோகர்கள் செவ்வாய் குரு பாபர்களும் மாரகர்களுமாவார்கள்.

## துலாம் லக்கினத்திற்கு

சந்திரன் புதன் சுக்கிரன் சனி சுபர்கள் சந்திரன் புதன் யோகர்கள் சூரியன் செவ்வாய் குரு பாபர்கள் சூரியன் குரு மாரகர்கள்.

## விருட்சிக லக்கினத்திற்கு

சூரியன் சந்திரன் குரு சுபர்கள் சூரியன் சந்திரன் யோகர்கள் செவ்வாய் புதன் சுக்கிரன் பாபர்களும் மாரகர்களுமாவார்கள்.

## தனசு லக்கினத்திற்கு

சூரியன் செவ்வாய் புதன் சுபர்கள் சூரியன் புதன் யோகர்கள் சந்திரன் சுக்கிரன் சனி பாபர்கள் சுக்கிரன் மாரகர்.

## மகர லக்கினத்திற்கு

செவ்வாய் புதன் சுக்கிரன் சுபர்கள் சுக்கிரன் யோகர் சூரியன் சந்திரன் குரு பாபர்கள் சந்திரன் குரு மாரகர்கள்.

### கும்பலக்கினத்திற்கு

புதன் சுக்கிரன் சனி சுபர்கள் சுக்கிரன் யோகர் சூரியன் சந்திரன் குருபாபர்கள் செவ்வாய் ஓர் பாகம் சுபர் ஓர் பாகம் பாபர் சூரியன் சந்திரன் மாரகர்கள்

### மீன லக்கினத்திற்கு

சந்திரன் செவ்வாய் குரு சுபர்கள் செவ்வாய் குரு யோகர்கள் சூரியன் புதன் சுக்கிரன் சனி பாபர்கள் சூரியன் புதன் சுக்கிரன் மாரகர்கள்

## 6. லக்கின முதல் 12 ஸ்தானங்களுக்கும் கூற வேண்டிய பலன்களின் விபரம்

### 1 ஆமிடம்

தேகபெலம் சிரசு மூளை வளர்ச்சி தாயின் தொழில் ஸ்தானம் தாய் வழி பாட்டியின் களத்திர ஸ்தானம் பற்றிய பலன்களைக் கூறுமிடமாகும்.

### 2 ஆமிடம்

தனம் குடும்பம் வாக்கு நேத்திரஸ்தானம் தாயின் நேர் மூத்த சகோதரஸ்தானம் தந்தை வழி பாட்டன் மற்றும் முதல் தாய் மாமனின் தொழில் ஸ்தானம் பற்றிய பலன்களைக் கூறுமிடமாகும்.

### 3 ஆமிடம்

நேர் இளைய சகோதரஸ்தானம் நேர் மூத்த சகோதரத்தின் புத்திர ஸ்தானம் மாமனார் ஸ்தானம் தந்தையின் சேர்க்கைதாரம் அல்லது இரண்டாம் தாரஸ்தானம் கழுத்து காது பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

### 4 ஆமிடம்

தாய் ஸ்தானம் சுகம் மார்பு நிலம் வீடு வாகனம் கிணறு இருப்பிடம் தொழிலுக்கு சேரும் கூட்டாளி பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 5 ஆமிடம்

புத்திர ஸ்தானம் தாய் மாமன் ஸ்தானம் தந்தை வழி பாட்டன் மற்றும் பூர்வ புண்ணிய ஸ்தானம் நேர் மூத்த சகோதரத்தின் களத்திர ஸ்தானம் குரு அல்லது ஆசான் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 6 ஆமிடம்

தந்தையின் தொழில் ஸ்தானம் தாய் வழி பாட்டனின் களத்திரஸ்தானம் நோய் கடன் எதிரி வம்பு வழக்கு வியாஜ்ஜியம் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 7 ஆமிடம்

களத்திரஸ்தானம் என்பது கணவன் மனைவி ஸ்தானமாகும். காமம் காதல் ஆண் பெண் மர்மஸ்தானம் சேர்க்கை தாரம் நேர் இளைய சகோதரத்தின் புத்திரஸ்தானம் தாய் வழி பாட்டி பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 8 ஆமிடம்

ஆயுள் ஸ்தானம் கலவரம் உண்டாகுதல் ஆயுதத்தாலும் தவறி விழுவதாலும் காயம் உண்டாகுதல் யுத்தம் உண்டாகுதல் கொலை களவு செய்தல் களவு போதல் தற்கொலை செய்து கொள்ளுதல் வம்பு வழக்கு காரியத்தடை உண்டாகுதல் அந்நிய தேசம் செல்லுதல் சிறை தண்டனை அரசாங்க விரோதம் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 9 ஆமிடம்

தந்தை ஸ்தானம் பாக்கியஸ்தானம் தாய்வழி பாட்டனின் தொழில் ஸ்தானம் இளைய சகோதரத்தின் களத்திர ஸ்தானம் தருமம் செய்தல் சகல பாக்கியத்தையடைதல் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 10 ஆமிடம்

தொழில் ஜீவனஸ்தானம் அமைச்சர் பதவி அரசாங்க உத்தியோகம் அரசாங்க உதவி ஊராட்சி நகராட்சி தலைவர் பதவி

அரசாங்கக் கான்ட்ராக்டர் ஆலய நிர்வாகம் தெய்வத்தொண்டு அர்ச்சகர் கவுரவம் தாயின் களத்திரஸ்தானம் வீடு நிலம் வாகனம் போன்றவற்றிற்கு சேரும் கூட்டாளி பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

### 11 ஆமிடம்

லாபஸ்தானம் நேர் மூத்த சகோதர ஸ்தானம் தந்தையின் நேர் இளைய சகோதரஸ்தானம் தந்தை வழி பாட்டன் முதல் தாய் மாமன் இவர்களின் களத்திரஸ்தானம் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

### 12 ஆமிடம்

விரயஸ்தானம் தாய் வழி பாட்டன் தந்தை வழி பாட்டிஸ்தானம் ஞான மோட்சம் பாபச்செலவு சயன சுகம் மறு ஜென்மம் பற்றிய பலன்களை கூறுமிடமாகும்.

## 17. கிரககாரகம் & பொதுவில் சுபர் பாபர் & ஆண் பெண் விபரம்

கிரககாரகம் என்பது ஒவ்வொரு வர்க்கத்தார்களுக்கும் செய்து வரும் தொழில்களுக்கும் பொருள்களுக்கும் அவயங்களுக்கும் பலன்களைக் கொடுக்கும் அதிகாரமுடையவர் களாவார்கள்.

### சூரியன் ஆண்பாபர்

தந்தை காரகன் வலது கண் பல் எழும்பு பருத்தி நூல் தூடம் சுண்மாம்பு அரசு பணி அரசாங்க உதவி அம்மை நோய் பித்த நோய் அமைச்சர் பதவி தலைவர் பதவி தாமிரம் மாணிக்கக்கல் கிழக்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

### சந்திரன் பெண் சுபர்

தாய்க்காரகன் கனிவர்க்கம் தேங்காய் ரஸவர்க்கம் புஸ்பம் எண்ணெய் பால் பாலில் இருந்து கிடைக்கும் பொருள்கள் வெல்லம் புளி விவசாயம் உணவுப் பொருள்கள் குளிர் பானம் நிலத்தடி நீர் சலி

நோய் நீர் சம்மந்தப்பட்ட நோய்கள் மனநிலை ஈயம் முத்து தென்மேற்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்

செவ்வாய் ஆண்பாபர்

சகோகரக்காரகன் நிலம் மண் மின்சாரம் ராணுவம் போலீஸ் நெருப்பு ரத்தம் மாமிசக்கடை பலகாரம் ஆப்ரேஷன் செங்கல் மண்பாண்டம் ரத்தக்காயம் செப்பு பவழம் தெற்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

புதன் அலி சுபர்

மாமன் காரகன் கணிதம் மருத்துவம் மருந்துப் பொருள் அஞ்சல் துறை தூதுவர் புத்தி ஓவியக்கலை அச்சுக்கலை கணக்கன் எழுத்துத் துறை புலவர் ஆசிரியர் கவிஞர் நாட்டியக்கலை கவிஞர் சோதிடம் மார்பு காற்று பித்தளை வாத நோய் மரகதக் கல் வடக்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்

குரு ஆண் சுபர்

புத்திரபாகம் வயிறு தனம் ஆசிரியர் சோதிடம் வங்கித்துறை நீதித்துறை வேதபாடம் அர்ச்சகர் ஆலய நிர்வாகம் அமைச்சர் பதவி தலைவர் பதவி அரசாங்கப் பதவி அரசாங்க உதவி தங்கம் வாத நோய் புஸ்பராகம் வடகிழக்கு முதலியவற்றிற்கு காரகராவார்.

சுக்கிரன் பெண் சுபர்

களத்திரக்காரகன் அல்லது கணவன் மனைவிக்காரகன் சேர்க்கை தாரம் காதல் காமம் ஆண் பெண் குறி சங்கீதம் ஆடை அணிகலன் சினிமா மதுபானம் குளிர்பானம் மழை நிலத்தடி நீர் காமநோய் நீரடைப்பு ஆஸ்த்துமா வெள்ளி வைரக்கல் தென்கிழக்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

சனி அலி பாபர்

ஆயுள்காரகன் இரும்பு எந்திரம் மரசாமான் வனத்துறை சிறைத்துறை விளையாட்டுத்துறை சூதாட்டம் போதைப்பொருள்

கலகம் வலிப்பு வாதநோய் நீலக்கல் மேற்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

ராகு பெண் பாபர்

தாய்வழி தந்தைவழி பாட்டன் காரகன் அந்நிய மொழியில் தேர்ச்சி பெறுதல் பொறியியல் துறை எந்திரச் சிகிச்சை நவீன எந்திரங்களைச் செய்தல் பழுதுபார்த்தல் விஷ வைத்தியம் விஷமருந்து வியாபாரம் வெளிநாடு செல்லுதல் வயிற்றுப்புண் தோல்வியாதி மது வியாபாரம் கல்லுடைக்கும் தொழில் கோமேதகக்கல் தென்மேற்கி திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

கேது அலி பாபர்

தாய் வழி தந்தை வழி பாட்டிக்காரகன் மந்திரம் மாந்ரீகம் பேரின் வழிபாடு ஞான மோட்சமடைதல் எந்திரச் சிகிச்சை கம்ப்யூட்டர் ரேடியோ டி.வி. டெக் போன்றவற்றை தயார் செய்தல் பழுது பார்த்தல் விஷ வைத்தியம் விஷ மருந்து போதைப் பொருள் மதுபானம் தற்கொலை செய்து கொள்ளுதல் கொலை செய்தல் களவு கடத்தல் தொழில் அரசுக்கு விரோதமான தொழில் சூதாட்டம் வெளிநாடு செல்லுதல் சிறை தண்டனை சிறைத்துறை பித்தநோய் இதயநோய் வைடூரியக்கல் தென்மேற்கு திசை முதலியவற்றிற்கு காரகராவார்.

### 18. சரம் திரம் உபயராசிகள்

மேஷம் கடகம் துலாம் மகரம் சரராசி ரிஷபம் சிம்மம் விருட்சிகம் கும்பம் திரராசி மிதுனம் கன்னி தனுசு மீனம் உபயராசி மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் ஆண் ராசி ரிஷபம் கடகம் கன்னி விருட்சிகம் மகரம் மீனம் பெண் ராசி

### 19. கிரக யுத்தம்

2 சர ராசிக்குடையவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டாலும் இதைப் போலவே 2 திரராசிக்குடையவர்களும் உபய

ராசிக்குடையவர்களும் ஒருவரை ஒருவர் பாத்துக் கொண்டாலும் கிரகயுத்தமாகும். இவ்வாறு கிரகயுத்தமுள்ளவர் களின் திசை வந்தால் நற்பலனளிக்காது என்று நூல் கூறுகிறது. இவர்கள் 4-10 ஆமிடத்திற்கும் அவ்வீட்டதிபதிக்கும் 6-8 ல் மறையாமலிருந்தால் நற்பலனைத் தருவார்கள் இவர்கள் எங்கிருந்தாலும் அவர்களின் திசையில் நற்பலன் தராது என்பது அனுபவத்தில் ஒத்து வரவில்லை.

## 20. ஆண் பெண் காலமும் வாரமும்

ஞாயிறு ஆண் திங்கள் பெண் செவ்வாய் ஆண் புதன் பெண் வியாழன் ஆண் வெள்ளி பெண் சனி ஆண் வாரங்களாகும். சூரிய உதயத்திலிருந்து 1/2 மணிக்கு அதாவது 1 1/4 நாழிகைக்கு ஒரு ஆண் காலம் பெண் காலம் என்றும் ஆண் வாரத்தில் ஜனனமான குழந்தைகள் முதலில் 1 1/4 நாழிகை ஆண் என்றும் அடுத்து 1 1/4 நாழிகை பெண் என்றும் அடுத்த 1 1/4 நாழிகை ஆண் என்றும் ஆண் பெண் காலத்தை நிர்ணயம் செய்ய வேண்டும் என்றும் ஜனனமான நாழிகைக்கு ஆண் பெண் காலம் ஒத்து வராவிட்டால் ஜனனமான நாழிகையைக் குறைத்து லக்கின கணிதம் செய்ய வேண்டும் என்று முற்காலத்தில் எழுதிய நூல்களில் கூறப்பட்டுள்ளது. இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை என்று கீரனூர் நடராஜர் இயற்றிய ஜாதகலங்காரத்தில் 1964 ஆம் ஆண்டு பதிப்பில் 1/2 நாழிகைக்கு அதாவது 12 நிமிஷத்திற்கு ஒரு ஆண் பெண் காலமென்று நிரணயம் செய்து கொள்ள வேண்டுமென்று ஓர் அட்டவணையும் போட்டுள்ளார் தற்காலத்தில் பெரிய பிரசவ ஆஸ்பத்திரிகளில் ஒரே நாளில் பல குழந்தைகள் பிறக்கிறது. 12 நிமிஷத்தில் ஆணும் பிறக்கிறது பெண்ணும் பிறக்கிறது. ஆதலால் 6 நிமிஷத்திற்கு ஒரு ஆண் பெண் காலம் என்று நிர்ணயம் செய்து லக்கின கணிதம் செய்வதுதான் சரியான வழியாகும்.

## 21. மணிக்குறிய நாழிகை வினாடி

1 மணிக்கு 2½ நாழிகை 1 நிமிஷத்திற்கு 2½ வினாடி 24 மணிக்கு 60 நாழிகை ஒரு நாள் 24 நிமிஷம் 1 நாழிகை 1 நாழிகைக்கு 60 வினாடி 1 வினாடிக்கு 60 தர்ப்பரை 1 தர்ப்பரைக்கு 60 விதர்ப்பரை 1 ராசிக்கு 30 பாகை 1 பாகைக்கு 60 கலை 1 கலைக்கு 60 விகலை ஒரு நட்சத்திர பாதத்திற்கு 3 பாகை 20 கலை

## 22. பரிவர்த்தனை வர்க்கோத்தமம் பற்றிய விபரம்

வர்க்கோத்தமம் என்பது ராசிச்சக்கத்தில் எந்த ராசியில் கிரகங்கள் நிற்கிறதோ அதே ராசியில் நவாம்சத்திலும் நின்றால் வர்க்கோத்தமம் என்பதாம் பரிவர்த்தனை என்பது ஒரு கிரகம் நின்ற ராசியின் அதிபதி அந்தக் கிரகத்தின் ஆட்சி வீட்டில் நின்றால் கிரகப் பரிவர்த்தனை என்பதாம்.

## 23. திதி சூனிய ராசிகளும் கிரகங்களும்

| திதிகள் | ராசிகள் | ராசி அதிபதிகள் |
|---|---|---|
| பிரதமை | துலாம் மகரம் | சுக்கிரன் சனி |
| துதியை | தனுசு மீனம் | குரு |
| திருதியை | சிம்மம் மகரம் | சூரியன் சனி |
| சதுர்த்தி | ரிஷபம் கும்பம் | சுக்கிரன் சனி |
| பஞ்சமி | கன்னி மீனம் | புதன் குரு |
| சஷ்டி | மேஷம் சிம்மம் | செவ்வாய் சூரியன் |
| சப்தமி | கடகம் தனுசு | சந்திரன் குரு |
| அஷ்ட்டமி | மிதுனம் கன்னி | புதன் |
| நவமி தசமி | சிம்மம் விருட்சிகம் | சூரியன் செவ்வாய் |
| ஏகாதசி | தனுசு மீனம் | குரு |
| துவாதசி | துலாம் மகரம் | சுக்கிரன் சனி |
| திரயோதசி | ரிஷபம் சிம்மம் | சுக்கிரன் சூரியன் |

| சதுர்த்தசி | மிதுனம் கன்னி | புதன் |
|---|---|---|
| | தனுசு மீனம் | குரு |

அமாவாசை பவுரணமிக்கு சூன்ய ராசியில்லை ஜனனமானது எந்தத் திதியோ அந்தத் திதியின் சூன்யராசி அதிபதிகள் லக்கினத்திற்கு 1-2-4--5-7-9-10-11 ஆமிடத்திற்கு அதிபதிகளாக இருந்து அவர்களின் திசை வந்தால் திசாநாதன் மேற்கூறிய ஸ்தானங்களில் நின்றாலும் ஆட்சி உச்சவீடுகளில் நின்றாலும் யோக பலனைத் தரமாட்டார் என்றும் 3-6-8-12 ல் நின்றால் யோக பலனைத் தருவார் என்றும் 3-6-8-12 க்குடையவராக இருந்து 3-6-8-12 ல் நின்றால் அவர்களின் திசையில் யோக பலனைத் தரமாட்டார் என்றும் மற்ற இடங்களில் நின்றால் யோக பலனைத் தருவார் என்றும் நூல் கூறுகிறது இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை.

## 24. கிரக தேவதைகளும் பரிகாரஸ்தலங்களும்

தீயபலனைக் கொடுக்கும் திசாபுத்திகள் நடக்கும் போதும் 7½ ச்சனி நடக்கும் போதும் ஆயுள் தோஷம் சரீரபீடை தொழில் முடக்கம் குடும்பக்கலகம் கணவன் மனைவி பிரிவு பிரயாண ஆபத்துகள் முதலியவைகள் உண்டாகும் அக்காலங்களில் நடந்து வரும் புத்தி நாதனுக்குரிய ஸ்தலங்களுக்குச் சென்றோ அல்லது அதி தேவதைகளின் ஆலயங்களிலோ அர்ச்சனை செய்து வழிபட்டு வந்தால் தோஷங்கள் நீங்கி சுகப்பலனைக் கொடுக்கும். இதுவல்லாது தாரதோஷம் புத்திர தோஷங்களுக்குரிய பரிகாரங்கள் பல ஆலயங்களில் செய்கிறார்கள் எனினும் கொடுமுடியில் ஒரே ஆலயத்தில் சிவன் விஷ்ணு பிர்மா பார்வதி லட்சுமி துர்க்கை ஆஞ்சநேயர் சனீஸ்வரர் இவர்களுக்கு தனித்தனி ஆலயங்கள் உள்ளதால் இதை அஷ்ட தேவதைஸ்தலம் என்றும் மும்மூர்த்திகள் ஸ்தலம் என்றும் கூறுவார்கள். இங்கு சகல தோஷத்திற்கும் பரிகாரம் செய்து வருகிறார்கள். இங்கு செய்யும் சாந்திக்கு உடனடியாக நிவாரணம் கிடைக்கிறது.

| கிரகங்கள் | அதிதேவதை | கிரகஸ்தலம் |
|---|---|---|
| சூரியன் | சிவன் | சூரியனார்கோயில் |
| சந்திரன் | பார்வதி | திருப்பதி |
| செவ்வாய் | சுப்ரமணியர் | வைத்தீஸ்வரன்கோயில் |
| புதன் | விஷ்ணு | மதுரை சொக்கர் |
| குரு | பிர்மா | செந்தில் ஆலங்குடி |
| சுக்கிரன் | லட்சுமி | ஸ்ரீரங்கம் |
| சனி | எமன் | திருநள்ளாறு |
| ராகு | பத்திரகாளி | காளாஸ்திரிதிரி |
| கேது | பத்திரகாளி | திருநாகேஸ்வரம் |

## 25. லக்கின கணிதம் செய்யும் விபரம்

பல பஞ்சாங்கங்கள் உள்ளது. அவற்றில் வாக்கியப் பஞ்சாங்கம் திருக்கணிதப் பஞ்சாங்கம் என்று இருவகை உண்டு ஒவ்வொன்றும் ஒரு ஊரை மையமாக வைத்து கணிதம் செய்திருப்பார்கள் அந்த ஊரின் சூரிய உதயத்தைப் போட்டிருப்பார்கள் பிறந்த ஊரின் சூரிய உதயத்தைக்கான எத்தனை வினாடி + கூட்ட வேண்டும் —கழிக்க வேண்டும் என்று ஓர் அட்டவணை போட்டிருப்பார்கள் அதைப் பார்த்து ஜனனமான ஊரின் சூரிய உதயத்தைக் காண வேண்டும் அந்த ஊருக்கு கிழக்கு திசையில் உள்ள ஊர்களுக்கு சுமார் 25 மைல் தூரத்திற்கு 1 நிமிஷம் வீதம் குறைத்தும் மேற்கு திசையில் உள்ள ஊர்களுக்கு கூட்டியும் பஞ்சாங்கத்தில் போடாத ஊர்களுக்கு கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

லக்கின கணிதம் செய்வதற்கு 28 நீ வாக்கியப் பஞ்சாங்கத்தை உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. இது தஞ்சாவூரை மையமாக வைத்துக் கணிதம் செய்தப் பஞ்சாங்கமாகும். இதில் ஒவ்வொரு ஊரின் அட்சாம்சத்தையும் சூரிய உதயு

வித்தியாசத்தையும் ஒவ்வொரு அட்சாம்சத்திற்கும் நேராக 12 ராசிகளுக்குரிய நிராயன ராசிமானத்தையும் அதாவது அந்த ராசிகளுக்குரிய நாழிகை வினாடியைப் போட்டிருப்பார்கள் அந்த ராசி மானப்படிதான் லக்கின கணிதமும் நவாம்ச கணிதமும் செய்ய வேண்டும். உதாரணமாக வைகாசி மாதம் 1 ஆம் தேதி சென்னையில் பகல் 1 மணிக்கு ஒரு குழந்தை ஜனனமான தென்றால் அன்று தஞ்சாவூர் சூரிய உதயம் காலை மணி 5-54 காலை 6 மணிக்கு 6 நிமிஷம் உள்ளது இந்த 6 நிமிஷத்தையும் கூட்டினால் 1 மணி 6 நிமிஷமாகும். காலை 6 மணி முதல் 1 மணி வரை சென்ற மணி 7 க்கு நாழிகை 17 வினாடி. 30 இதில் 6 நிமிஷத்திற்குரிய 15 வினாடியையும் கூட்டினால் நாழிகை 17 வினாடி 45 ஆகும். சூரிய உதய அட்டவணையில் சென்னைக்கு 10 வினாடி + கூட்ட வேண்டும் என்று போட்டிருப்பார்கள் இதையும் கூட்டினால் நாழிகை 17 வினாடி 55 வரும் இதுதான் பகல் 1 மணிக்கு சென்னைக்குரிய சூரிய உதயாதி நாழிகை 17 வினாடி. 55 ஆகும். இதைப் போலவே தை மாதம் 1 ஆம் தேதி பகல் 1 மணிக்கு சென்னையில் ஜனனம் என்றால் அன்று தஞ்சாவூர் சூரிய உதயம் காலை மணி 6-39 இந்த 39 நிமிஷத்தில் சென்னைக்குரிய வித்தியாசம் 10 வினாடிக்கு 4 நிமிஷம் இதைக் கழித்தால் 35 நிமிஷமாகும். இதன்படி அன்று சென்னை சூரிய உதயம் காலை மணி 6-35 ஜனனமான மணி 1 ல் 35 நிமிஷம் கழித்தால் மணி 12- 25 க்கு சென்னை உதயாதி நாழிகை 16 வினாடி 2½ வரும் பிறகு ஜனனமான தேதியன்று அந்த மாத ராசியின் இருப்பு நாழிகை வினாடியைப் பஞ்சாங்கத்தில் போட்டிருப்பார்கள். அதை எழுதிக் கொள்ள வேண்டும். பிறகு ஜனனமான ஊருக்குரிய அட்சாம்ச எண்ணுக்கு நேராகப் போட்டிருக்கும் ராசிமானப்படி ஜனனமான தேதியன்று அந்த மாத ராசியின் இருப்போடு அதற்கடுத்து வரும் ராசிமானத்தைப் போட்டு ஜனனமான நாழிகை வரை கூட்டி வந்து எந்த ராசியில் முடிவாகிறதோ அந்த ராசியே ஜென்ம லக்கினமாகும்.

**26. அட்சாம்சவிபம்**

28 நெ வாக்கியப் பஞ்சாங்கத்தில் சூரிய உதய அட்ட வணையில் அந்தந்த ஊரின் அட்சாம்சத்தைப் போட்டிருப்பார்கள். இதில் கலை 30க்குக் கீழிருந்தால் கலையை நீக்கி உள்ள பாகைப்படியும் கலை 30க்கு மேலிருந்தால் முழு எண்ணாகக் கணக்கிட்டு அந்த அட்சாம்சத்திற்குறிய ராசிமானப் படி கணிதம் செய்ய வேண்டும். உதாரணமாக திருச்சி அட்சாம்சம் பாகை 10 கலை 50க்கு 11 என்றும் கோயமுத்தூர் 11 என்று போட்டுள்ள ராசிமானப்படியும் புதுக்கோட்டை அட்சாம்சம் பாகை 10 கலை 23க்கு 10 என்றும் கொச்சி 10 என்று போட்டுள்ள ராசிமானப்படி கணிதம் செய்ய வேண்டும். பஞ்சாங்கத்தில் போடப்பட்டுள்ள ஊர்களுக்கு அருகில் உள்ள ஊர்களுக்கு உபயோகித்துக் கொள்ளவேண்டும்.

**27. உதாரண சாதகம் 28 நெ. பஞ்சாங்கப்படி**

14-5-1993 ஸ்ரீமுக வருடம் வைகாசி மாதம் 1 ஆம் தேதி வெள்ளிக்கிழமை பகல் மணி 1-00 அளவில் சென்னையில் ஜனனம் அன்று அமர பட்ச அஷ்டமிதிதி நா 13 வி 56க்கு மேல் நவமி திதி அவிட்ட நட்சத்திரம் நா 13 வி 56க்கு மேல் சதய நட்சத்திரம் அன்று சென்னை சூரிய உதயம் காலை மணி 5-50 சூரிய உதய நிமிஷம் 10 கூட்டி சூரிய உதயாதி நாழிகை 17 வினாடி 55க்கு சிம்ம லக்கினம் கடக நவாம்ச லக்கினம் கும்ப ராசியில் ஜனனம் சென்னை அட்சாம்சம் பாகை 13 கலை 04க்கு அட்சாம்சம் 13ன் படி அன்று வைகாசி மாதம் 1ஆம் தேதி ரிஷபராசி இருப்பு நா 5 வி 11 அடுத்து மிதுனம் நா 5 வி 29 அடுத்து கடகம் நா 5 வி 22 இதைக் கூட்டி வந்த நா 16 வி 02 உதயாதி நா 17 வி 55ல் நா 16 வி 02 ஐக் கழித்து வந்த நா 1 வி 53 சிம்மலக்கினத்தில் செல்லானதாகும். சிம்மம் நா 5 வி 08 ல் செல்லானதைக் கழித்து வந்த நா 3 வி 15 சிம்மலக்கினத்தில் இருப்பதாகும். அன்றைய ராசியின் கிரக நிலை

| சுக் | சூரி | புத கேது | |
|---|---|---|---|
| சந் | ராசி | | செவ் |
| சனி | | | லக் |
| | ரா | | குரு (வக்) |

சூரியன் சித்திரை மாத முதல் பங்குனி மாதம் வரை மேஷராசி முதல் மீன ராசி வரை மாதம் ஒரு ராசியாகச் சஞ்சாரம் செய்வார் இதன்படி மாதப்பிறப்பன்று சூரியன் அடுத்தராசிக்கு மாறும் நேரத்தை பஞ்சாங்கத்தில் கிரக பாத சாரங்கள் என்ற பகுதியில் போட்டிருப்பார்கள். அன்றைய பகல் காலத்தை பஞ்சாங்கத்தில் அகஸ்நாழிகை வினாடி எவ்வளவு என்பதையும் போட்டிருப்பார்கள். அந்த அகஸ் காலத்திற்கு முன் மாதம் பிறந்தால் அடுத்த மாதத்தின் முதல் தேதியாகவும் அகஸ் காலத்திற்கு மேல் மாதம் பிறந்தால் அந்த மாதத்தின் கடைசி தேதியாகவும் போட்டிருப்பார்கள். இதை மாதத்தின் முதல் தேதியன்றும் கடைசி தேதியன்றும் ஜனனமாகிறவர் களுக்கு மட்டும் சூரியன் அடுத்த ராசிக்கு மாறும் நேரத்தைப் பார்த்து சூரியனை ராசிச்சக்கரத்தில் போட வேண்டும். உதாரணமாக மாதத்தின் முதல் தேதியன்று உதயாதி நா 16 வி 15க்கு ஜனனம் என்றால் அன்று சூரியன் அடுத்த ராசிக்கு நா 18 வி 15க்கு மாறுகிறார் என்றால் சூரியனை முதல் மாத ராசியில் போட வேண்டும். மாதத்தின் கடைசி தேதியன்று நா 35 வி 15க்கு ஜனனம் என்றால் சூரியன் அடுத்த ராசிக்கு நா 32 வி 15க்கு மாறுகிறார் என்றால் சூரியனை அடுத்த மாத ராசியில் போட வேண்டும்.

உதாரண சாதகத்தில் வைகாசி மாதம் 1 ஆம் தேதி அகஸ் நா 31 வி 16 அன்று சூரியன் நா 29 வி 48க்கு ரிஷப ராசிக்கு மாறுகிறார் ஜனனமானது நா 17வி 55க்கு என்பதால் சூரியனை மேஷராசியில் போடப்பட்டுள்ளது. பஞ்சாங்கத்தில் ஒவ்வொரு மாதத்திற்கும் ராசிச்சக்கரம் போட்டு நடுவில் கிரகங்கள் அடுத்த ராசிக்கு மாறும் தேதிகளையும் போட்டிருப்பார்கள். ஜனனமான தேதிக்கு முன் கிரக

மாற்றம் போட்டிருந்தால் அந்தக் கிரகத்தை அடுதத ராசியில் போட வேண்டும். ஜனனமான தேதியன்று கிரக மாற்றம் போட்டிருந்தால் ஜனனமான நேரத்திற்கு முன் மாறியிருந்தால் அந்த கிரகத்தை அடுத்த ராசியில் போட வேண்டும். பின் மாறுகிறது என்றால் அதே ராசியில் போட வேண்டும். ராகும் கேதும் பின்னோக்கி சஞ்சாரம் செய்யும். மற்ற கிரகங்கள் முன்னோக்கி சஞ்சாரம் செய்யும். வக்கிரம் பெற்ற கிரகங்களும் பின்னோக்கி சஞ்சாரம் செய்யும். வக்கிரம் முடிந்த பின்னர் முன்னோக்கி சஞ்சாரம் செய்யும். வக்கிரம் பெற்ற கிரகங்கள் மாறும் தேதியைப் பார்த்து அந்தக்கிரகத்தை மேல் ராசியில் போட்டு(வக்) என்று போட வேண்டும். ராகு கேது மேல் ராசியில் தான் போட வேண்டும். சூரியன் சந்திரன் ராகு கேது இவர்களுக்கு வக்கிர கதியில்யில்லை மற்ற கிரகங்களுக்கு வக்கிர கதி உண்டு.

## 28 சந்திரனை ராசிச்சக்கரத்தில் போடும் விபரம்

நட்சத்திரம் 1க்கு 4 பாதம் 27 நட்சத்திரங்களுக்கும் 108 பாதங்களாகும். மேஷ முதல் மீனம் வரை ராசி 1க்கு 9பாதங்கள் வரை சஞ்சாரம் செய்யும். எந்த நட்சத்திரப்பாதத்தில் கிரகங்கள் சஞ்சாரம் செய்கிறார்களோ அந்த நட்சத்திரப் பாதத்திற்கு எந்த ராசி வருகிறதோ அந்த ராசியில் சந்திரனைப் போட வேண்டும்.

## 29. 12 ராசிகளுக்குறிய நட்சத்திரப் பாதங்கள்.

| | |
|---|---|
| மேஷராசி | அசுவணி 1-2-3-4 பரணி 1-2-3-4 கார்த்திகை 1 |
| ரிஷபராசி | கார்த்திகை 2-3-4 ரோகிணி 1-2-3-4 மிருகசீரிடம் 1-2 |
| மிதுனராசி | மிருகசீரிடம் 3-4 திருவாதிரை 1-2-3-4 புனர்பூசம் 1-2-3 |
| கடகராசி | புனர்பூசம் 4 பூசம் 1-2-3-4 ஆயில்யம் 1-2-3-4 |
| சிம்மராசி | மகம் 1-2-3-4 பூரம் 1-2-3-4 உத்திரம் 1 |
| கன்னியா ராசி | உத்திரம் 2-3-4 அஸ்த்தம் 1-2-3-4 சித்திரை 1-2 |
| துலாம்ராசி | சித்திரை 3-4 சுவாதி 1-2-3-4 விசாகம் 1-2-3 |
| விருட்சிக ராசி | விசாகம் 4 அனுஷம் 1-2-3-4 கேட்டை 1-2-3-4 |

தனுசு மூலம் 1-2-3-4 பூராடம் 1-2-3-4 உத்திராடம் 1
மகரம் உத்திராடம் 2-3-4 திருவோணம் 1-2-3-4 அவிட்டம் 1-2
கும்பம் அவிட்டம் 3-4;சதயம் 1-2-3-4 பூரட்டாதி 1-2-3
மீனம் பூரட்டாதி 4 உத்திரட்டாதி 1-2-3-4 ரேவதி 1-2-3-4

## 30 நவாம்ச கணிதம் செய்யும் விபரம்

ஜனன லக்கினத்திற்குறிய ராசியின் நாழிகை வினாடிகளை வினாடிகளாக்கி 9ஆல் வகுத்து வந்த ஈவு விநாடிகள் ஒரு நவாம் சப்பங்காகும். பிறகு லக்கினத்தில் செல்லான நாழிகை வினாடிகளை வினாடியாக்கி நவாம்ச பங்கு வினாடியால் வகுத்து வந்த ஈவு எத்தனை வருகிறதோ அதனோடு மீதி உள்ள பங்கில் ஜனனமானதாகக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு ராசிக்கும் 9 நட்சத்திரப்பாதங்கள் வரும். பாதம் 1க்கும் ஒரு நவாம் சப்பங்காகும் இதன் படி எந்த நட்சத்திரத்தில் எத்தனையாவது பாதம் வருகிறதோ அந்த நட்சத்திரப்பாதத்தில் லக்கினம் உள்ளதாகக் கொள்ள வேண்டும். பிறகு அசுவணி முதல் லக்கினம் நின்ற நட்சத்திரப்பாதம் வரை எத்தனை பாதங்கள் வருகிறதோ அதை 12 ஆல் வகுத்து ஈவு போக மீதி உள்ளதை மேஷ முதல் எண்ணி வந்து எந்த ராசியில் முடிவாகிறதோ அந்த ராசியே நவாம்சலக்கினமாகும். பிறகு கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் பாதங்களை பஞ்சாங்கத்தில் போட்டிருப்பார்கள். ஜனனமான தேதியன்று ஜனனமான நேரத்தில் ஒவ்வொரு கிரகமும் எந்த நட்சத்திரப் பாதத்தில் சஞ்சாரம் செய்கிறார்கள் என்று பார்த்து எழுதி வைத்துக் கொள்ள வேண்டும் பிறகு அசுவணி முதல் கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் நட்சத்திரப் பாதம் வரை எத்தனை பாதங்கள் வருகிறதோ அதை 12 ஆல் வகுத்து ஈவு போக மீதி உள்ளதை மேஷ முதல் எண்ணி வந்து எந்தராசியில் முடிவாகிறதோ அந்தராசியில் அந்த கிரகத்தை நவாம்சச் சக்கரத்தில் போட வேண்டும். மீதி இல்லை என்றால் 12 மீதியாகக் கொள்ள வேண்டும். நவாம்ச கணிதம் செய்ய மற்றொரு வழியும் உள்ளது அதாவது அசுவணி முதல் கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் நட்சத்திரம் வரை எண்ணி வந்து 3ல் வகுத்து வந்த மீதியை மேஷம் 1 சிம்மம் 2

தனுசு 3 என்று எண்ணி வந்து எந்த ராசியில் முடிவாகிறதோ அந்த ராசியில் அந்த நட்சத்திரத்தின் 1ஆம் பாதம் அடுத்த ராசி 2ஆம் பாதம் அடுத்த ராசி 3ஆம் பாதம் அடுத்த ராசி 4ஆம் பாதம் என்று எண்ணி வந்து நவாம்சச் சக்கரத்தில் கிரகங்களையும் லக்கினத்தையும் போட வேண்டும்.

## 31. உதாரண சாதகத்தின் நவாம்ச கணிதம்

உதாரண சாதக லக்கினம் சிம்மத்திற்குறிய நா 5 வி 08க்கு வினாடிகள் 308 இதை 9ல் வகுத்து வந்த ஈவு வினாடி 34-1/4 சிம்ம லக்கினத்தில் செல்லானது. நா 1 வி 53க்கு 113 வினாடிகள். இதை 34 1/4 ல் வகுத்து வந்த ஈவு 3 மீதி 10-1/4 வருவதால் சிம்மம் 4 ஆவது பங்கில் ஜனனமாகும் சிம்மத்திற்கு மகம் 4 பூரம் 4 உத்திரம் 1 ஆக 9 பாதங்களாகும். இதன் படி மகம் 4 ஆம் பாதத்தில் லக்கினம் உள்ளது. அசுவணி முதல் மகம் வரை 10 நட்சத்திரங்கள். இதை 3 ல் வகுத்து வந்த மீதி 1க்கு மேஷம் 2 ரிஷபம் 3 மிதுனம் 4 கடகம் நவாம்ச லக்கினம் கடகமாகும்.

வைகாசி 1 ஆம் தேதி நா 17 வி 55க்கு கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் நட்சத்திர பாதங்களின் விபரம்.

மகம் 4ல் லக்கினம்-கார்த்திகை 1ல் சூரியன் சதயம் 1ல் சந்திரன்-பூசம் 4ல் செவ்வாய்-கார்த்திகை 4ல் புதன்-அஸ்த்தம் 2ல் குரு(வக்)-ரேவதி 1ல்- சுக்கிரன்-அவிட்டம 2 ல் சனி-கேட்டை 1ல் ராகு-ரோகிணி 3ல் கேது இதற்குறிய நவாம்சம்.

| புத | | குரு | கேது |
|---|---|---|---|
| | நவாம்சம் | | லக் |
| | | | |
| சூரி-சந்<br>சுக்-ராகு | செவ் | | சனி |

## 32. திசாபுத்தி கணிதம்

ஜனனமான தேதியன்று ஜனனமான நேரத்திற்கு எந் நட்சத்திரம் வருகிறதோ அந்த நட்சத்திரத்தின் மொத்த நாழிகை வினாடி எவ்வளவு வருகிறதோ அவற்றை வினாடிகளாக்கி எழுதி கொள்ள வேண்டும். பிறகு ஜனனகாலம் வரை செல்லான நாழிகை வினாடியை வினாடிகளாக்கி எழுதிக் கொள்ள வேண்டும். மொத் வினாடிகளை ஆதியந்த வினாடிகள் என்று கூறுவார்கள். ஆதியந் வினாடியில் செல்லான வினாடியைக்கழித்து மீதி வினாடிகளை எழுதிக்கொள்ள வேண்டும். பிறகு பஞ்சாங்கத்தில் ஒரு திசைக்கு நட்சத்திரங்கள் வீதம் அட்டவணை போட்டிருப்பார்கள். ஜனனமான நட்சத்திரத்திற்கு எந்த திசை வருகிறதோ அந்த திசைக்குறி வருடத்தால் மீதி வந்த வினாடியைப் பெருக்கி வந்த வினாடியை ஆதியந்த வினாடியால் வகுத்து வந்த ஈவு வருடமென்றும் மீதி வினாடியை 12 ஆல் பெருக்கி ஆதியந்த வினாடியால் வகுத்து வந் ஈவு மாதமென்றும் மீதி வினாடியை 30 ஆல் பெருக்கி ஆதியந் வினாடியால் வகுத்து வந்த ஈவு நாள் என்றும் அந்தத்திசையில் இருப்பு வருடம் மாதம் நாள் என்று எழுதிக்கொள்ள வேண்டும். பிறகு அந்தத்திசையின் மொத்த வருடத்தில் இருப்பு வருடம் மாதம் நாளைக் கழித்து செல்லானது வருடம் மாதம் நாள் எவ்வளவு என்பதையும் எழுதிக் கொள்ள வேண்டும். பிறகு பஞ்சாங்கத்தில் 9 திசைகளுக்கும் ஒவ்வொரு புத்தியாகக் கூட்டி ஓர் அட்டவணை போட்டிருப்பார்கள். அதைப் பார்த்து செல்லான வருடம் மாதம் நாள் வரை எத்தனை புத்திகள் செல்லாகியிருக்கிறது என்று பார்த்து ஜனனகாலத்தில் இன்ன திசையில் இன்ன புத்தியில் செல்லானது போக இருப்பு வருடம் மாதம் நாள் என்று எழுதிக் கொண்டு அடுத்தடுத்து வரும் புத்திகளுக்கும் திசைகளுக்கும் பலன் கூற வேண்டும்.

## 33. நட்சத்திர ஆதியந்தம் காணும் விபரம்

ஜனனமான தேதியன்று ஆரம்ப நட்சத்திரம் நா 2 வி 1 வரையும் அதற்கடுத்த நட்சத்திரம் நா 58 வி 30 வரை உள்ளது என்றால்

நா 58 வி 30ல் நா 2 வி 10 ஐக்கழித்து வந்த நா 56 வி 20 அந்த நட்சத்திரத்தின் ஆதியந்தமாகும். ஜனனமான நாழிகை வினாடியில் நா 2 வி 10ஐக் கழித்து வந்த நாழிகை வினாடி செல்லானதாகும். ஜனனமான நாளின் முதல் நாள் நட்சத்திரம் நா 58 வி 30 வரையும் அடுத்த நட்சத்திரம் ஜனனமான நாளன்று நா 60 வி 00 வரையும் அடுத்த நாள் நா 2வி 10வரை உள்ளது என்றால் 60ல் நா 58 வி 30ஐக் கழித்து வந்த மீதி நா 1 வி 30ல் அன்றைய நா 60-00ஐயும் அடுத்த நாள் நா 2 வி 10 ஐயும் கூட்டி வந்த நா 63 வி 40 ஆதியந்தமாகும். ஜனனமான நாழிகை வினாடியோடு நா 1 வி 30 ஐக் கூட்டி வந்த நாழிகை வினாடி செல்லானதாகும்.

ஜனன நாளன்று ஆரம்ப நட்சத்திரம் நாழிகை 26வினாடி 10 வரையும் அடுத்த நட்சத்திரம் மறு நாள் நா 30 வி 15 வரை உள்ளது என்றால் 60ல் நா 26வி 10ஐக் கழித்து வந்த நா 33 வி 50ல் நா 30 வி 15 ஐக் கூட்டி. வந்த நா 64 வி 05 ஆதியந்தமாகும். ஜனனம் நா 28 வி 45க்கு என்றால் இதில் நா 26 வி 10 ஐக்கழித்து வந்த நா 2 வி 35 செல்லானதாகும். முதல் நாள் நட்சத்திரம். நா 25 வி 30 வரையும் ஜனன நாளன்று நா 26வி 10வரை உள்ளது என்றால் 60ல் 25-30ஐக் கழித்து வந்ததையும் அன்று உள்ளதையும் கூட்டி வந்த நா 60 வி 40 ஆதியந்தமாகும். அன்று ஜனனம் நா 16 வி 15க்கு என்றால் இதில் 25-30 ஐக் கூட்டி வந்த நா 41 வி 45 செல்லானதாகும். இதன்படி நட்சத்திர ஆதியந்தம் செல்லானது. இருப்பு முதலியவற்றை கணிதம் செய்ய வேண்டும்

## 34. உதாரண ஜாதகத்தின் திசாபுத்தி கணிதம்

வைகாசி மாதம் 1ஆம் தேதி அவிட்டம் நா 13 வி 56மறுநாள் சதயம் நா 20 வி 01 வரை உள்ளது. 60ல் 13-56 ஐக் கழித்து வந்த நா 46வி 04ல் 20-01 ஐக் கூட்டி வந்த நா 66வி 05 சதயம் ஆதியந்தமாகும். இதை 60ல் பெருக்கி வந்த வினாடி 3965 ஆதியந்த வினாடிகளாகும். ஜனனமான நா 17 வி 55ல் 13-56 ஐக் கழித்து வந்த நா 3 வி 59க்கு வினாடி 239 செல்லான வினாடியாகும். ஆதியந்த வினாடி 3965 ல்

239 ஐக் கழித்து வந்த வினாடி 3726 இருப்பாகும். சதய நட்சத்திரத்திற்கு ராகு திசை வருடம் 18 இருப்பு விநாடி 3726 X 18ல் பெருக்கி வந்த வினாடி 67060. இதை ஆதியந்தம் 3965 ல் வகுத்து வந்த ஈவு 16 வருடமாகும் மீதி 3628 X 12 ல் பெருக்கி வந்த வினாடி 43536. இதை 3965 ல் வகுத்து வந்த ஈவு 10 மாதமாகும். மீதி 3886 X 30 ல் பெருக்கி வந்த வினாடி 116580. இதை 3965 ல் வகுத்து வந்த ஈவு 29 நாளாகும். மீதி 1595. இதை 60 ல் பெருக்கி ஆதியந்தத்தால் வகுத்து நாழிகையைக் கணக்கிடுவதும் உண்டு. அது தேவையில்லை. ராகுதிசை வருடம் 18 ல் இருப்பு 16-10-29 ஐக் கழித்து வந்த வருடம் 1-1-1 ராகுதிசையில் செல்லானதாகும். ராகுதிசை ராகு புத்தி வருடம் 2-8-12 ல் 1-1-1 ஐக் கழித்து வந்த வருடம் 1-7-11 ஜனன காலத்தில் ராகு திசையில் ராகு புத்தியில் இருப்பு வருடம் 1 மாதம் 7 நாள் 11 ஆகும்.

### 35 ஆயுள் பாகம்

கிரக நிலைப்படி லக்கினாதிபதியும் ஆயுள் ஸ்தானமான 8 ஆம் வீட்டதிபதியும் 1-4-5-7-9-10 ல் நின்று லக்கினத்திற்கு சுபர்களோடு சேர்ந்திருந்து குரு பார்த்தால் பூரண ஆயுள் 100 வருடம் வரை ஆயுளைக் கொடுக்கும் என்றும் 1-8க்குடையவர்கள் ஆட்சி உச்சம் பெற்று லக்கினத்திற்கு சுபர்களோடு கூடி நின்று குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் 100 வருடம் ஆயுளைக்கொடுக்கும் என்றும், 1-8க்குடையவர்கள் கேந்திரதிரிகோணங்களில் நின்று அந்த லக்கினத்திற்குறிய சுபர்களின் பார்வை சேர்க்கை பெற்றிருந்து குரு பார்வை சேர்க்கையில்லாதிருந்தால் 75 வருடம் ஆயுளைக் கொடுக்கும் என்றும், மேற்கூறிய படி 1-8க்குடையவர்கள் 6-8-12 ல் ஆட்சி உச்சமின்றி அந்த லக்கினத்திற்குறிய சுபர்கள் கூடி நின்று குரு பார்த்தால் 66 வருடம் ஆயுளைக் கொடுக்கும் என்றும் மேற்கூறிய படி கிரக நிலையிருந்து சனி ராகு கேது கூடி நின்று லக்கினத்திற்குறிய சுபர்கள் பார்வை சேர்க்கையின்றி குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் 50 வருடம் ஆயுளென்றும், 1-8 க்குடையவர் பகை நீச வீடுகளில் நின்று சனி ராகு கேதுவோடு கூடி நின்று குரு பார்த்தால் 33 வருடம்

ஆயுளென்றும் 1-8க்குடையவர்கள் 6-8-12 ல் பகை நீச வீடுகளில் சனி ராகு கேதுவோடு கூடி லக்கினத்திற்கு சுபர்களின் பார்வை சேர்க்கையின்றியும் சந்திரனும் 6-8-12ல் மறைந்து நின்று இவர்களை குரு பாராதிருந்தால் அற்பாயுள் 16 வருடம் என்றும் கிரக நிலைப்படி ஆயுள் பாகத்தை நூல் கூறுகிறது.

சரஸ்திர உபய ராசிப்படி ஆயுள்

| | | | |
|---|---|---|---|
| 1 க்குடையவர் | சரராசி | 8க்குடையவர் | சரராசி |
| 1 க்குடையவர் | உபயராசி | 8க்குடையவர் | திரராசி |
| 1 க்குடையவர் | சரராசி | 8க்குடையவர் | திரராசி |
| 1 க்குடையவர் | திரராசி | 8க்குடையவர் | சரராசி |
| 1 க்குடையவர் | உபயராசி | 8க்குடையவர் | உபயராசி |
| 1 க்குடையவர் | சரராசி | 8க்குடையவர் | உபயராசி |
| 1 க்குடையவர் | திரராசி | 8க்குடையவர், | திரராசி |
| 1 க்குடையவர் | உபயராசி | 8க்குடையவர் | சரராசி |

1-2-3வரிகளில் கூறியபடி கிரக நிலையிருந்தால் ஆயுள் 100 வருடமென்றும் 4-5-6 ஆவது வரிகளில் உள்ளபடி கிரக நிலையிருந்தால் ஆயுள் 66 வருடமென்றும் 7-8-9 ஆவது வரிகளில் கூறிய படி கிரக நிலையிருந்தால் ஆயுள் 33 வருடமென்றும் நூல் கூறுகிறது.

அஷ்ட்ட வர்க்க ஆயுள்பாகம்

சூரியன் சந்திரன் செவ்வாய் புதன் குரு சனி சுக்கிரன் இவர்களின் அஷ்ட்டவர்கத்தைப் போட்டு வந்த ஆதி பரலை திரி கோண சோதனை ஏகாதிபத்திய சோதனை செய்து ஏகாதிபத்திய பரலை ஒவ்வொரு ராசிகளுக்கும் கொடுக்கப்பட்டுள்ள எண்களால் பெருக்கி ராசி குணாகரமாக்கி ஒவ்வொரு கிரகங்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ள எண்ணால் ஏகாதிபத்திய பரலைப்பெருக்கி கிரக குணாகரமாக்கி ராசி குணாகரப்பரலையும் கிரககுணாகரப்பரலையும் கூட்டி 324ல் பெருக்கி325ல் வகுத்து வந்த ஈவை 27ல் வகுத்து வந்த ஈவு வருடமென்றும் மீதியை 12ல் பெருக்கி 27 ல் வகுத்து வந்த ஈவு

மாதமென்றும் மீதியை 30 ல் பெருக்கி 27 ல் வகுத்து வந்த ஈவு நாள் என்றும் இதில் வரும் வருடம் மாதம் நாள் தான் ஆயுள் பாகமென்றும் நூல் கூறுகிறது.

திசாபுத்தியின்படி

மிருகசீரிடம் சித்திரை அவிட்டத்தில் பிறந்தவர்களுக்கு 4 ஆம் திசை சனி திசை மாரக திசை என்றும் அசுவனி மகம் மூலத்தில் பிறந்தவர்களுக்கு5 ஆம் திசை செவ்வாய் திசை மாரக திசை என்றும் பரணி பூரம் பூராடத்தில் பிறந்தவர்களுக்கு 6 ஆம் திசை மாரக திசை என்றும் ஆயில்யம் கேட்டை ரேவதியில் பிறந்தவர்களுக்கு 7 ஆம் திசை மாரக திசை என்றும் ஒவ்வொரு லக்கனத்திற்கும் கூறப்பட்டுள்ள மாரகர்கள் 2-3-7-8-12 லிருந்து அவர்களின் திசை வந்தால் மாரகமுண்டாகும் என்றும் நூல் கூறுகிறது.

ஷட்வர்க்க ஆயுள் பாகம்

1 ராசி 2 ஓரை 3 திரேக்காணம் 4 நவாம்சம் 5 துவாதசாம்சம் 6 திரிமிசாமிசம் இந்த 6 சக்கரங்களிலும் 8 க்குடையவர் ஆட்சி உச்ச வீடுகளில் நின்றால் தீர்க்காயுள் என்றும் சமம் நட்பு வீடுகளில் நின்றால் மத்திய ஆயுள் என்றும் பகை நீச வீடுகளில் நின்றால் அற்பாயுள் என்றும் நூல் கூறுகிறது. இத்தனை வழிகளில் ஆயுள் பாகத்தைக் கூற வேண்டும் என்று சோதிட நூல்களில் கூறப்பட்டுள்ளது. இது அனுபவத்தில் ஒத்துவரவில்லை.

புத்திர தோஷம் உள்ளவர்களுக்கு பிறக்கும் குழந்தைகள் இறந்து போவதும் உண்டு. சகோதர தோஷத்தால் முன் பின் சகோதரங்கள் இறந்து போவதும் உண்டு. சாதகப் பொருத்தம் இல்லாமல் மணம் செய்து கொண்ட தம்பதியர்களில் ஒருவர் இறந்து போவது உண்டு.குழந்தைகளின் சாதகத்தினால்,தாய் தந்தை இறந்து போவதும் உண்டு. இது வல்லாது புயல் வெள்ளத்தாலும் பூகம்பத்தாலும் யுத்தத்தாலும் ஆயிரக்கணக்கானோர் இறந்து போவதும் உண்டு. பிரயாண காலங்களில்உண்டாகும்

விபத்துகளாலும் தீவிபத்துகளாலும் பலர் இறந்து போவதும் உண்டு. ஆதலால் கிரக நிலையைக் கொண்டு ஆயுள் பாகத்தை ஸ்தூலமாகத் தான் கூற முடியுமேயன்றி திட்ட வட்டமாகக் கூற முடியாது என்றும் திட்ட வட்டமாகக் கூற வேண்டுமென்றால் பிர்ம தேவன் ஒருவனைத்தவிர வேறு யாராலும் கூற முடியாதென்று கீழ் வரும் பாடலில் ஓர் மகான் கூறியுள்ளார் அது முற்றிலும் உண்மையாகவும் நடைமுறையிலும் ஒத்து வருகிறது.

பாடல்

கோள் சாரம் கொண்டு குறிப்பதல்லால் மாணவர் தம்
நாள் பலனை நான் முகனையன்றியே-வாள் கண்ணாய்
ஆர்வவல்லார் கூறுதற்கு ஆர்வல்லார் கேட்பதற்கு
ஆர்வல்லார் ஆராய்வதற்கு

என்று கூறியுள்ளார். ஆதலால் புத்திரதோஷம் உள்ளவர்கள் அதற்குறிய பரிகாரங்களைச் செய்து கொண்டால் குழந்தைகளுக்கும் சகோதர தோஷம் உள்ளவர்களை தனித்தனியாகப்பிரித்து விட்டால் சகோதரத்திற்கும் சாதகப் பொருத்தமில்லாமல் மணம் செய்து கொண்டவர்கள் தம்பதியர்கள் பிரிந்து வாழ்வதாலும் குழந்தையின் சாதகத்தில் தாய் தந்தைக்கு தோஷமிருந்தால் குழந்தையை வேறு உறவினர்கள் வீட்டில் விட்டு வளர்த்து வந்தாலும் மேற் கூறியவர்களுக்கு உண்டாகும் மரணத்தைத் தடுக்கலாம்.

## 36. திசா புத்தியினால் வரும் நோய்கள்

சுகஸ்தானமான 4 ஆமிடம் சூரியன் செவ்வாய் சனி இவர்களின் வீடாக இருந்து 4 ல் ஆட்சி பெற்று நின்று இவர்களின் திசை நடக்கும்போது திசாநாதனுக்கு 6-8 ல் ராகு கேது நின்று இவர்களின் புத்தி நடந்து வரும் காலத்திலும் ராகு கேது திசை நடந்து வரும் காலங்களில் திசாநாதனுக்கு 6-8 ல் 4 க்கு டையவர்கள் நின்று இவர்களின் புத்தி நடந்து வரும் காலங்களில் மாரடைப்பு உண்டாகும்.

4 க்குடையவர் சனியாக இருந்து சனி திசை நடந்து வரும் காலத்தில் திசா நாதனுக்கு 6-8 ல் செவ்வாய் நின்றால் காயம் படுதல்

ரத்த ஓட்டக் கோளாறுகள் வரும் சூரியன் நின்றால் பித்த சம்பந்தப்பட்ட நோய்கள் வரும் 4க்குடையவர் சந்திரனாக இருந்த சந்திர திசை நடந்து வரும் காலத்தில் 4 ஆமிடத்திற்கும் திசாநாதனுக்கும் 6-8 ல் சுக்கிரன் நின்று சுக்கிர புத்தி நடந்து வரும் காலத்தில் நீரிழிவுநோய் வரும் 4 க்குடையவர் சுக்கிரனாக இருந்து சுக்கிர திசை நடந்து வரும் காலத்தில் திசாநாதனுக்கும் 4 ஆமிடத்திற்கும் 6-8 ல் சூரியன் நின்று சூரிய புத்தி வந்தால் பித்த நோய் எலும்புருக்கி நோய் வரும் சந்திர புத்தியினால் சளி சம்மந்த நோய் வரும். ராகு கேது புத்தியினால் வெட்டை நோய் கர்ப்பப்பை கோளாறு வரும். 4 க்குடையவர் செவ்வாயாக இருந்து செவ்வாய் திசை நடந்து வரும் காலத்தில் 4 ஆமிடத்திற்கும் திசாநாதனுக்கும் 6-8 ல் ராகு கேது நின்று ராகு, கேது புத்திவரும் காலத்தில் கட்டி பிளவை, குடல் சம்பந்தப்பட்ட நோய் வந்து ஆப்பரேஷன் செய்யக் கூடிய நிலையும் உண்டாகும். மேற்கூறியபடி திசை புத்திகள் வருவதற்கு முன் மருத்துவ பரிசோதனை செய்து கொண்டு புத்திநாதர்களின் கிரக தேவதைகளுக்கு அர்ச்சனை செய்து மருந்து சாப்பிட்டு வந்தால் குணமாகிவிடும். இதுவல்லாது 6 க்குடையவருக்கும் 6 ஆமிடத்திற்கும் 6-8 ல் நிற்கும் திசை புத்தி வந்தால் கிரககாரகங் களுக்குரிய நோய்கள் வரும் தகுந்த சிகிச்சையும் பரிகாரமும் செய்து வந்தால் குணமாகி விடும். மேற்கூறியபடி சிகிச்சையும் பரிகாரமும் செய்து கொண்டும் மது மங்கை போன்ற வகையில் அதிக ஈடுபாடு கொள்ளாமலும் உடலுக்கு ஒத்துக் கொள்ளாத உணவு பண்டங்களைப் புசிக்காமலும் வயதுக்கு உழைப்பிற்கும் ஏற்றவாறு அளவோடு உண்டு வந்தால் தீர்க்காயுளோடு வாழ்ந்து வரலாம். சோதிட நூல்களில் பரணி கார்த்திகை திருவாதிரை ஆயில்யம் மகம் பூரம் சித்திரை சுவாதி விசாகம் கேட்டை பூராடம் பூரட்டாதி இந்த நட்சத்திரத்தன்று நோய் வந்து படுத்தால் மரணமுண்டாகும்' என்றும் கடன் கொடுத்தால் திரும்பி வராது' என்றும் கூறுகிறது. இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை பொதுவாக நட்சத்திரங்களுக்கு நன்மையோ தீமையோ செய்யக்கூடிய சக்தி கிடையாது என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

## 37. வாக்கு கல்வி பற்றிய விபரம்

2 ஆமிடம் வாக்குஸ்தானம் 2 க்குடையவரும் புதனும் கூடி 6-8-12 ல் ஆட்சி உச்சமின்றி சனி ராகு கேது இவர்களில் ஒருவர் கூடி நின்று குரு பார்வை சேர்க்கையில்லாதிருந்தால் ஊமையாவார்கள். குரு சேர்க்கை பார்வை யிருந்தால் 5 வயதுக்கு மேல்தான் பேசும் ஆற்றல் உண்டாகும். திக்கிப் பேசுவதும் உண்டாகும் 2 க்குடையவரும் புதனும் 6-8-12 ல் நின்று 9 க்குடையவர் குரு இவர்களின் சேர்க்கை பார்வையிருந்தால் உண்மையை மறைத்துப் பேசுவதில் சமர்த்தர்களாக இருப்பார்கள்.

4 ஆமிடம் கல்விஸ்தானம் வாக்குஸ்தானாதிபதியும் புதனும் குருவும் கூடி 1-2-4-5-7-9-10-11 ல் நின்றால் உயர்ந்த கல்வியில் தேர்ச்சி பெறுவார்கள் 2 க்குடையவர் மேற்கூறிய ஸ்தானங்களில் நின்று குரு புதன் பார்த்தாலும் உயர்ந்த கல்வியில் தேர்ச்சி பெறுவார்கள். 2க்குடையவரை குரு புதன் பார்க்காவிட்டாலும் 4-10 ல் குரு புதன் நின்றாலும் உயர்ந்தக் கல்வியில் தேர்ச்சி பெறுவார்கள். மேற்கூறியபடி கிரக நிலை உள்ளவர்களுக்கு 2-4 ல் சனி ராகு நின்று இவர்களின் புத்திகள் நடந்து வரும் காலங்களில் இறுதியாண்டுத் தேர்வுகள் வந்தால் முதல் வகுப்பில் தேர்ச்சி பெறவிடாது 2 க்குடையவர் 6-8-12 ல் நின்று குரு புதன் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் சமக்கல்வி உண்டாகும். இத்ததகைய அமைப்பு உடையவர்களுக்கு 2-4 ல் ராகு சனி நின்று இவர்களின் புத்திகளில் ஓராண்டு காலம் உயர்கல்வியில் தடை உண்டாகும் பின்பு தொடர்ந்து படித்து தேர்ச்சி பெறுவார்கள்.

2 க்குடையவரும் புதன் குரு மூவரும் 6-8-12 ல் நின்றால் கல்வியில் மந்த நிலை உண்டாகும் இத்தகைய அமைப்பு உடையவர்களுக்கு 2-4 ல் சனி ராகு இருந்து இவர்களின் புத்தி நடந்து வந்தால் கல்வி தடைப்பட்டு விடும் மீண்டும் தொடர முடியாது.

## 38. நேத்திரஸ்தானம்

லக்கினாதிபதியும் 2 க்குடையவர் சுக்கிரன் சூரியன் கூடி 3ல் நின்றால் குருடாவார்கள். 3க்குடையவர் ஆட்சி உச்சம் பெற்றிருந்தாலும் 3 ஆமிடத்தைக் குரு பார்த்தாலும் ஒரு கண் பழுதாகும். சூரியன் கூடாமல் சந்திரன் கூடியிருந்தால் மாலைக்கண் உண்டாகும். 2க்குடையவர் சூரியன் சுக்கிரன் கூடி 6-8-12 ல் நின்று குரு பார்த்தால் நடு வயதில் பார்வை கோளாறு உண்டாகும்.

## 39. சகோதர பாகம் பிரிவு 1

லக்கினத்திற்கு 3 ஆமிடம் இளைய சகோதரஸ்தானம் 3 க்கு 3 ஆமிடம் இளையதுக்கு இளைய சகோதரஸ்தானமாகும் 11 ஆமிடம் மூத்த சகோதரஸ்தானம் 11 க்கு 11 ஆமிடம் மூத்ததுக்கு மூத்த சகோதரஸ்தான மாகும். இதைப் போலவே 4 ஆமிடத்திற்கு 3-11 ஆமிடத்தைக் கொண்டு தாயின் முன் பின் சகோர்தரிகளையும் 5 ஆமிடத்திற்கு 3 ஆமிடத்தைக் கொண்டு தாய் மாமன் வர்க்கத்தையும் புத்திர பாகத்தையும் 3-11 ஆமிடத்தைக் கொண்டு தந்தை வழி பாட்டன் வர்க்கத்தையும் 7 க்கு 3-11 ஆமிடத்தைக் கொண்டு கணவன் மனைவி சகோதர வர்க்கத்தையும் 9 க்கு 3-11 ஆமிடத்தைக் கொண்டு தந்தையின் சகோதர வர்க்கத்தையும் 12 ஆமிடத்திற்கு 3-11 ஆமிடத்தைக் கொண்டு தாய்வழி பாட்டன் சகோதர வர்க்கத்தையும் பார்க்க வேண்டும்.

### பிரிவு 2

3 ல் கேது நின்று அவ்வீட்டதிபதி 6-8-12 ல் நின்று சகோதரரக்காரன் செவ்வாயும் சனியும் சேர்ந்திருந்தாலும் ஒருவ்வவரை ஒருவர் பார்த்துக் கொண்டாலும் மேற்கூறியபடி கிரகக நிலை இருந்து 3 க்கு 7 ஆம் வீட்டதிபதி 3 க்கு 6-8-12 ல் நின்றால் இளைய சகோதரமிருக்காது 11 ல் கேத்து நின்று 11 க்குடையவர் 6-8-12 ல் நின்று 11 க்கு 7 ஆம் வீட்டதிபதி 11 க்கு 6-8-12 ல் நின்றால் மூத்த சகோதரமிருக்காது சகோதரமிருந்தால் ஊமை குருடு முடம் போன்ற குறைபாடு உடையவர்களாக இருப்பார்கள்.

பிரிவு 3

3 ஆமிடத்தில் 11 க்குடையவர் நின்று 3 க்குடையவர் 6-8-12 ல் நின்று 9 க்குடையவரும் குருவும் 3க்கு உடையவரைப் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் 3 சகோதரமிருக்கும் ஆணாயின் பெண்ணும் பெண்ணாயின் ஆணுமாக இளைய சகோதரங்கள் இருக்க வேண்டும் 3ம் ஆணாகவோ பெண்ணாகவோ இருந்தால் தனித்தனியாகப் பிரிந்திருந்தால் தோஷமுண்டாகாது.

பிரிவு 4

பிரிவு 3 ல் கூறியபடி 3 ம் ஆணாகவோ பெண்ணாகவோ இருந்து லக்கினத்திற்கு 7 ஆமிடத்தில் ராகு கேது இவர்களில் ஒருவர் நின்று 7 க்குடையவர் 6-8-12 ல் நின்றால் தார தோஷமாகும். இதைப் போலவே 3க்கு 7 ல் சனி நின்று 3 க்கு 7 க்குடையவர் 3க்கு 6-8-12 ல் நின்றால் இளைய சகோதரத்திற்கும் தாரதோஷமாகும் மேலே கூறிய் படி சகோதர தோஷமுள்ளவர்களுக்கு இருவருக்கும் தார தோஷமிருந்தால் முறைப்படி விவாகம் நடக்கும் ஒருவருக்கு மட்டும் தார தோஷமிருந்தால் அண்ணன் இருக்க தம்பிக்கும் அக்காள் இருக்க தங்கைக்கும் விவாகம் நடக்கும் முறைப்படி விவாகம் நடந்தால் இளைய சகோதரத்திற்கு விவாகமாகி குழந்தை பிறந்த பின்னர்தான் சாதகருக்கு புத்திர பாகம் உண்டாகும். மூத்தவருக்கு சோரதாரமிருந்தால் முதலில் குழந்தை பிறக்கும்.

பிரிவு 5

11 ஆமிடத்திற்கு 3 ஆமிடம் மூத்ததுக்கு இளைய சகோதரஸ்தானம் லக்கினமாகும். 11 ஆமிடத்திற்கு லக்கினாதிபதி 6-8-12 ல் நின்று 11 க்குடையவர் லக்கினத்திற்கு 6-8-12 ல் இரு வழி சகோதர தோஷமாகும். இதைப் போலவே 3 க்குடையவர் 6-8-12 ல் நின்று இளைய சகோதரத்திற்கு மூத்த சகோதர ஸ்தானம் லக்கினமாகும். லக்கினாதிபதி 3 ஆமிடத்திற்கு 6-8-12 ல் நின்றால் இரு வழி சகோதர தோஷமாகும். இவ்வாறு இருவழி சகோதர தோஷமிருந்தாலும் மூத்த சகோதரத்தின் சாதகத்தில் இளைய

சகோதர தோஷமும் இளைய சகோதரத்தின் ஜாதகத்தில் மூத்த சகோதர தோஷமும் இருந்தாலும் இருவரும் ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம். தோஷமில்லை. முறைப்படி விவாகம் நடக்கும் மூத்த சகோதர தோஷமிருந்து மூத்த சகோதரத்திற்கு தார தோஷமும் இருந்து மூத்தவர் காந்தர்வ கலப்பு மணம் செய்து கொண்டவர்களுக்கு புத்திர தோஷம் உண்டாவதில்லை. ஒரு சிலர் திருமணம் செய்து கொள்ளாமலு மிருக்கிறார்கள் இதைப் போலவே பிரிவு 1ல் கூறியுள்ள வர்க்கத்தார்களுக்கும் அவரவர்கள் ஸ்தானத்தையே லக்கினமாக வைத்து திருமணத்தைப் பற்றியும் புத்திரபாகம் பற்றியும் பலன் கூறலாம்.

## பிரிவு 6

3க்குடையவர் ஆட்சிபெற்று வேறு கிரகங்களின் பார்வை சேர்க்கை இல்லாதிருந்தால் 2 சகோதரமிருக்கும் அது ஆண்கிரக வீடாக இருந்தால் ஆண் சகோதரமும் பெண்கிரக வீடாக இருந்தால் பெண் சகோதரமும் உண்டாகும். இது ஆண், பெண் இருவர் ஜாதகத்திற்கும் பொருந்தும் மேற்கூறியபடி 3க்குடையவர் ஆட்சி பெற்று 11க்குடையவர் 3ல் நின்றாலும் 3க்குடையவரைப் பார்த்தாலும் 5 சகோதரங்கள் இருக்கும் ·

## பிரிவு 7

3ல் ராகு கேது சனி இவர்களில் ஒருவர் நின்று 3க்குடையவர் 1-2-4-5-7-9-10-11ல் நின்றால் இளையசகோதரம் பெண் சகோதரம் உண்டாகும். இது ஆண், பெண் இருவர் சாதகத்திற்கும் பொருந்தும் மேற்கூறியபடி கிரகநிலை இருந்து 3-11க்குடையவர்கள் சேர்ந்திருந்தாலும் 3க்குடையவரை 11க்குடையவர் பார்த்தாலும் அல்லது 3க்குடையவரை குருபார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் ஆண்சாதகமாயின் ஆண்1 பெண் 2 சகோதரங்கள் உண்டாகும் பெண் சாதகமாயின் பெண் 1ம் ஆண் 2 அல்லது 3 சகோதரங்கள் உண்டாகும்.

## பிரிவு 8

3ல் 11க்குடையவர் நின்று குருபார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் 3க்குடையவர் 6-8-12ல் நின்றாலும் அல்லது 3க்குடையவரை குருவும் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் ஆண் 3 பெண் 2 அல்லது ஆண் 2 பெண் 3 சகோதரங்களிருக்கும் இத்தகைய கிரகநிலை உள்ளவர்கள் தனது சகோதரங்களுக்கு கல்வி உத்தியோகம் திருமணம் போன்றவற்றிற்கு கடன் வாங்கியும் தனது மனைவியின் நகைகளை விற்று செலவு செய்துவிட்டு பாகப் பிரிவினை உண்டாகும போது வாங்கிய கடன்களை சகோதர்கள் ஏற்று கொள்ளமால் எல்லா கடன்களையும் தாமே ஏற்றுக் கொள்ள வேண்டிய சூழ்நிலை உண்டாகி சகோதரர்களுக்கு சமபங்காகப் பிரித்து கொள்வார்கள். இத்தகைய கிரகநிலை உள்ளவர்கள் பெண் சகோதரி ஒன்று கணவனைப் பிரிந்தோ விதவையோகவோ திருமணம் செய்யமுடியாத சூழ்நிலையிலோ தன் வீட்டிலேயே இருக்கும் பெண்சகோதரிக்கும் ஒரு பாகம் கொடுக்க வேண்டியநிலை உண்டாகும் குடும்ப நிர்வாகம் தந்தையிடமிருந்தால் சமபங்கின்றி ஒரு தொகையை வாங்கிக் கொண்டு விடுதலை எழுதிக் கொடுத்துவிட்டு வெளியேறி விடுவார் தந்தை இல்லாதிருந்து நிறைய சொத்துக்களிருந்து குடும்ப நிர்வாகத்தை கவனித்து வருபவர்கள் போலியான கடன்களைக் காட்டி கடன்களுக்கு வீடு நிலங்களை சாட்டல் செய்து மீதி உள்ளதை சகோதரங்களுக்கும் வீட்டிலிருக்கும் பெண் சகோதரிக்கும் சமபங்காக பிரித்துக் கொடுத்து பெண் சகோதரியை தாமே பாதுகாத்து வருவார் பிற்காலத்தில் சகோதரனின் பாகத்தையும் கிரயம் கொடுத்து வாங்கிக் கொள்வார் பூர்வ புண்ணிய ஸ்தானமான 5 ல் கேது ராகு நின்றால் சொத்து விவகாரம் வந்து சகோதரர்கள் கோர்ட்டில் வழக்குத் தொடர்வார்கள் தொடர்ந்தாலும் இறுதியில் இவருக்குச் சாதகமாகத்தான் தீர்ப்பு கூறுவார்கள்.

பிரிவு 9

சகோதரஸ்தானாதிபதி 1.2.4.5.7.9.10.11 ல் நின்று 3 ல் க்குடையவரும் குருவும் நின்றாலும் இருவரும் 3 ஆமிடத்தை பார்த்தாலும் அல்லது 3 க்குடையவரை 11 க்குடையவரும் குருவு சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் நிறைந்த சகோதரமுடைய வராவா 6க்கு மேல் 10 சகோதரங்கள் வரை இருக்கும் இத்தகைய அமைப் உடையவர்கள் பகைமையின்றி ஒருவருக்கொருவர் உதவி செய் கொண்டும் பெண் சகோதரிகளின் குடும்பத்தார்களோடு கூட் சேர்ந்து தொழில் செய்து கொண்டும் சகோதரி வர்க்கத்திலேயே பென் கொடுத்து பெண எடுத்து கொண்டும் சந்தோஷமாக வாழ்வார்கள்.

பிரிவு 10

சகோதர எண்ணிக்கையை 3 க்கு 3 ஆமிடத்தைக் கொண் இளைய சகோதரத்தையும் 11 க்கு 11 ஆமிடத்தைக் கொண்டு மூத் சகோதரத்தையும் எண்ணி வந்து சகோதரங்களைக் கா வேண்டும். இவ்வாறு எண்ணி வரும்போது பிரிவு 2-3 ல் கூறியுள்ளபடி கிரக நிலை உள்ளவர்களுக்கு ராகு கேது நிற்கு ஸ்தானம் சகோதர ஸ்தானமாக வந்தாலும் அந்த ஸ்தானத்திற் சகோதர ஸ்தானாதிபதி 6-8-12 லிருந்தாலும் அதற்கு மேல் முன் பி சகோதரங்கள் இருக்காது மேலே கூறியபடி பிரிவு 4-5 ல் கூறியுள்ளபடி கிரகநிலை உள்ளவர்களுக்கு இருந்தால் சகோத தோஷம் வரும் ஸ்தானத்திற்கு தார தோஷமிருந்தால் அதன் மே சகோதரமிருக்காது. பிரிவு 8 ல் உள்ளபடி கிரக நிலை உடையவர்களுக்கு சகோதர தோஷமும் தார தோஷமும் வரு ஸ்தானத்தின் சகோதரம் இறந்திருக்கும் பிரிவு 9 ல் கூறியப உள்ளவர்களுக்கு மேற்படி தோஷஸ்தானங்கள் வந்தால் ஆணுக்கு பெண்ணும் பெண்ணுக்கு ஆணுமாக இருக்கும் சகோத தோஷமுண்டாகாது. பொதுவாக 3-11 க்குடையவர் பரிவர்த்தனை சேர்க்கையிருந்தால் ஆண்பெண் எதுவாயினும் சகோதரமில்லா ஒண்டியாகவோ அல்லது 3 சகோதரங்களோ இருக்கும்

சகோதரமிருந்தால் அவர்களின் பாகத்தை அனுபவிக்கவோ அல்லது தனது பாகத்தை அவர்கள் அனுபவித்து வரவோ செய்திடும்.

பிரிவு 11

சகோதரம் உண்டாகும் காலம் 3 க்குடையவர் 3 ல் நிற்பவர் 3 ஆமிடத்தைப் பார்ப்பவர் 3க்குடையவரோடு சம்மந்தப்பட்டவர் களின் திசை புத்தி வரும் காலத்தில் சகோதரம் உண்டாகும்.

பிரிவு 12

பொதுவாக சாஸ்திரத்தை கெடுப்பது சகோதரம் தான் என்று கூறுவார்கள் ஏனென்றால் தற்காலத்தில் பெரும்பாலானவர்கள் 2 குழந்தைக்கு மேல் தடை செய்து கொள்வதாலும் அடுத்தடுத்து உண்டாகும் கெர்ப்பங்களை கெடுத்து விடுவதாலும் முன்காலத்தில் எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் தடை செய்து கொள்ளாதிருந்து வந்ததாலும் நம் நாட்டிலிருந்து அண்டை நாடு சென்று பல தலமுறைகளாக வாழ்ந்து வருபவர்கள் அதிகமான சகோதரங்களை உடையவர்களாக இருப்பதாலும் இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்துதான் சகோதரம் பற்றி கூற வேண்டும். லாபாதிபதியான 11 ஆம் வீட்டதிபதியால் சகல பலன்களும் நடந்து வந்துள்ளதால்தான் 11 க்குடையவரை எல்லா பாவகங்களிலும் முக்கியமானதாகக் குறிப்பிட்டுள்ளேன்.

## 40. மாதுருபாகம் அல்லது தாய்பாகம் பிரிவு 1

மாதுருஸ்தானமான 4 ஆமிடத்திற்குடைய வரும் மாதுருக்காரகன் சந்திரனும் ராகு கேது கூடாமலிருந்தால் மாதாவுக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும் மேற்கூறியபடி கிரக நிலையிலிருந்து 4 க்குடையவரோடும் சந்திரனோடும் ராகு கேது சனி இவர்கள் கூடி நின்று குருவும் 9 க்குடையவரும் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் மாதாவுக்கு தீர்காயுளைக் கொடுக்கும்.

பிரிவு 2

4 க்குடையவர் 6-8-12 ல் மறைந்து நின்று சந்திரன் கேந்திர திரிகோணங்களில் நின்று சனி ராகு கேது கூடாமலிருந்து 4 க்குடையவரையும் சந்திரனையும் 9 க்குடையவரும் குருவும் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் மாதாவுக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும்.

பிரிவு 3

4 ல் சந்திரன் ராகு கேதுவோடு கூடி நின்று சனி பார்த்தால் கார கோபாவ நாஸ்த்தி அதாவது மாதாவுக்கு ஆகாது என்று நூல் கூறுகிறது. ஆயினும் மாதுருஸ்தானாதிபதி பிரிவு 1 ல் கூறிய படியிருந்து 9 க்குடையவரும் குருவும் 4 க்குடையவரோடு சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் மாதாவுக்கு தோஷமுண்டாகாது. மாதாவுக்கு அடிக்கடி நோய்களைக் கொடுத்து வைத்தியம் செய்து கொண்டேயிருக்க வேண்டிய நிலை உண்டாகும் சிலருக்கு ஆப்ரேஷன் செய்ய வேண்டிய நிலையும் உண்டாகும்.

பிரிவு 4

4 க்குடையவரும், சந்திரனும் 6-8-12 ல் நின்று ராகு கேது கூடி நின்று சந்திரன் பகை நீச வீடுகளில் நின்று சனி பார்த்தாலும் கூடி நின்றாலும் தாய்க்கு தோஷமுண்டாகும். இத்தகைய கிரக நிலையிலிருந்து 9 க்கு 7 ஆம் வீட்டாதிபதி 9 க்கு 6-8-12 ல் நின்றாலும் நீசம் பெற்று நின்றாலும் தந்தை மனைவியை இழந்து விடுவார் என்ற அமைப்பும் இருந்து சாதகருக்கு இளைய சகோதரமில்லை என்ற அமைப்பும் இருந்தால் தாய் இறந்து போய் தந்தை இரண்டாந்தாரம் செய்து கொள்வார்.

பிரிவு 5

பிரிவு 4 ல் கூறியபடி கிரகநிலை இருந்து சாதகருக்கு இளைய சகோதரம் உண்டாகும் என்ற கிரக நிலை இருந்தால் சாதகரையும் தந்தையையும் விட்டு தாய் பிரிந்து போய் விடுவாள்.

தந்தை மறுமணம் செய்து கொள்வார். தாய் சிலது காலம் பிரிந்திருந்து சாதகருக்கு 3க்குடையவர் 3 ல் நிற்பவர் 3 க்கு 7 ல் நிற்பவர்களுடைய திசை புத்தி நடக்கும் போது தாய் ஸ்தானத்திற்கு 7 க்குடையவர் 7 ல் நிற்பவர் திசை புத்தி நடந்து வரும் போது இந்த இரு அமைப்புகளும் எந்த திசை புத்தியில் வருகிறதோ அந்த புத்தியில் தாய் தந்தையோடு சேர்ந்து தந்தையின் இளைய தாரத்தோடு சேர்ந்து ஒற்றுமையாக இருப்பாள் சாதக்ருக்கு இளைய சகோதரம் உண்டாகும்.

## பிரிவு 6

பிரிவு 4 ல் கூறியபடி கிரகநிலை இருந்து சாதகருக்கு இளைய சகோதரம் உண்டாகும் என்ற கிரகநிலையும் இருந்து தந்தை ஸ்தானத்திற்கு 7 க்குடையவர் 9 க்கு 11 ல் நின்றாலும் 9 க்கு 7 க்குடையவரோடு 9க்கு 11 க்குடையவர் 9க்கு 7 ல் நின்றாலும் 9 க்கு 7 க்குடையவரோடு 9க்கு 11 க்குடையவர் கூடி நின்றாலும் பார்த்தாலும் தாய் பிரிந்து போகமாட்டாள், தாய்க்கு உடல் நலக்குறைவு உண்டாகி தாயாரே தந்தைக்கு மறுமணம் செய்து வைப்பார். 4 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர்கள் பரிவர்த்தனை அடைந்திருந்தாலும் சேர்ந்திரு ந்தாலும் தாயின் இளைய சகோதரியை அல்லது ஒன்றுவிட்ட சகோதரியை அல்லது சாதகரின் மாமன் மகளையோ தந்தைக்கு மறுமணம் செய்து வைப்பார். இந்த அமைப்பு இல்லாவிடில் 9 க்கு 3-11 க்குடையவர்கள் பரிவர்த் தனையடைந்தாலும் இருவரும் சேர்ந்திருந்தாலும் 9க்கு 3க்குடையவரை 9க்கு 11 க்குடையவர் பார்த்தாலும் சாதகரின் அத்தை மகளை மணம் செய்து வைப்பார்.

## பிரிவு 7

பிரிவு 1 ல் கூறியபடி தாய்க்கு தோஷமில்லை என்ற அமைப்பு இருந்து சாகருக்கு சகோதர தோஷமில்லாதிருந்து 9 க்கு 7 க்குடையவர் 9க்கு 6-8-12 ல் ராகு கேதுவோடு கூடி நின்றாலும் அல்லது ராகு கேது 9க்கு 7 ல் நின்றாலும் தந்தை தாரதோஷ முடையவர் என்பதாம். இதன்படி கிரகநிலை இருந்தால் தாய் தந்தை இருவரும் காந்தர்வ மணம் செய்து கொண்டவர்களாகவோ அல்லது

தந்தைக்கு உறவில் பெண்ணிருந்து தடைப்பட்டோ நிச்சயமாகி நின்று போயோ தந்தைக்கு விவாகம் நடந்திருக்க வேண்டும் இவ்வாறு இல்லையென்றால் தந்தைக்கு விவாகத்திற்கு முன் சேர்க்கை தாரமிருந்து விலகியிருக்கும் இதுவுமில்லையென்றால் தந்தைக்கு வேறு பெண்ணின் தொடர்பு உண்டாகிவிடும்.

பிரிவு 8

பிரிவு 4 ல் கூறியபடி கிரகநிலை இருந்து தாய் உயிரோடிருந்தால் தாய் வேறு ஒருவரோடு சேர்ந்து வாழ்ந்து வருவாள் புத்திரபாகம் உண்டாகும் சேர்க்கை தாரத்தால் உண்டாகும் குழந்தைக்கு சாதகரின் சகோதர தோஷம் அந்தக் குழந்தையைப் பாதிக்காது.

## 41. தாய்மாமன் பாகம் பிரிவு

மாமன் ஸ்தானமான 5 ஆமிடத்தில் சனி ராகு கேது செவ்வாய் இவர்களில் இருவர் சேர்ந்து நின்று 5 க்குடையவரும் மாமக்காரகனுமான புதனும் 6-8-12 ல் ஆட்சி உச்சமின்றி நின்றால் மாமனுக்கு ஆகாது இருந்தாலும் இறந்து போவார். ஆட்சி உச்சம் பெற்றிருந்தால் ஒரு மாமனிருப்பார் மாமன் உறவாக இருக்கமாட்டார் உறவாக இருந்தால் தீய பழக்கங்களில் ஈடுபட்டு சொத்துக்களை எல்லாம் இழந்து விடுவார்.

பிரிவு 2

பிரிவு 1 ல் கூறியபடி பாபர்கள் நால்வர்களில் ஒருவர் 5ல் நின்று 5க்குடையவர் நீசம் பெற்று புதன் 6-8-12 லிருந்தால் மாமனுக்கு ஆகாது 5ல் கிரகமில்லாதிருந்து 5க்குடையவரும் 6-8-12 ல் ராகு கேதுவோடு கூடி நின்றால் மாமனுக்கு ஆகாது 5ல் புதன் நீசம் பகை பெற்று நின்று 5க்குடையவர் 6-8-12 ல் ராகு கேதுவோடு கூடி நின்றாலும் மாமனுக்கு ஆகாது.

## பிரிவு 3

பிரிவு 1-2 ல் கூறியபடி கிரக நிலையிலிருந்து மாமன் இல்லை என்றால் தாய்வழி சொத்து கிடைக்குமா கிடைக்காதா என்று பார்க்க வேண்டும். அதாவது 4க்குடையவர் 11 லும் 11க்குடையவர் 4 லும் சேர்ந்திருந்தாலும் 4-11 க்குடையவர் சேர்ந்திருந்தாலும் 4 க் குடையவரை 11 க்குடையவர் பார்த்தாலும் தாய்வழி சொத்து கிடைக்கும் அல்லது 9 க்கு 7 ஆம் வீட்டதிபதி 9க்கு 11ல் நின்றாலும் 9 க்கு 11 ஆம் வீட்டதிபதி 9 க்கு 7 ல் நின்றாலும் இவ்விருவரும் சேர்ந்திருந்தாலும் 9 க்கு 11 க்குடையவர் 9க்கு 7 ஆம் வீட்டையோ அவ்வீட்டதிபதியையோ பார்த்தாலும் தந்தைக்கு மனைவி வழியில் சொத்து கிடைக்கும் என்பதாம். இந்த இருவகையில் ஒரு வகைப்படி கிரகநிலையிலிருந்தாலும் தாய வழி சொத்து கிடைக்கும்.

## பிரிவு 4

பிரிவு 3 ல் கூறியபடி கிரக நிலையிலிருந்து 4 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர் பரிவர்த்தனையடைந்திருந்தாலும் இருவரும் சேர்ந்திருந்தாலும் 4க்கு 3 க்குடையவரை 4க்கு 11 க்குடையவர் பார்த்தாலும் தாய்வழி சகோதரிகளும் சமபாகமாகப் பிரித்துக் கொள்வார்கள். இந்த அமைப்புப்படி கிரகநிலை இல்லாதிருந்தால் தாய்வழி சகோதரிகளுக்கு ஒரு தொகையைக் கொடுத்துவிட்டு சொத்துக்கு சம்மந்தம் இல்லை என்று எழுதி வாங்கிக் கொண்டு தாமே அனுபவித்து வருவர்.

## பிரிவு 5

பிரிவு 3 ல் உள்ளபடி கிரகநிலை இல்லாதிருந்து பிரிவு 4ல் முன் பாகத்தில் கூறியபடி கிரகநிலை யிருந்தால் தனக்கு ஒரு தொகையுங் கொடுத்துவிட்டு தாய் வழி சகோதரி அனுபவித்து வருவார். பிரிவு 3-4 ல் கூறியபடி கிரக நிலையில்லாதிருந்தால் தாய் வழி பாட்டன் தானமான 12 ஆமிடத்திற்கு 7 ல் ராகு கேது நின்று அவ்வீட்டதிபதி 12 க்கு 6-8-12 லிருந்தாலும் அல்லது ராகு கேது கூடி நின்றாலும் தாய்வழி பாட்டனுக்கு 2 ஆம் தாரம் உண்டாகி ஆண்

சந்ததி உன்டாகியிருக்கும். இந்த அமைப்பும் இல்லாதிருந்தா சாதகரின் மற்ற சகோதரங்களின் சாதகத்திலோ தாய்வ சகோதரியின் புத்திரர்களின் ஜாதகத்திலோ பிரிவு 3ல் கூறியபடி கிர நிலையிருந்தால் அவர் அனுபவித்து வருவார்கள். தாய்க் சகோதரிகள் இல்லாதிருந்து தாய்வழி சொத்து சாதகருக்கு கிடை காது என்ற அமைப்பும் தாய்வழி பாட்டனுக்கு 2ம் தார அமையாமலுமிருந்து 12 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர் பரிவர் தனை சேர்க்கை பார்வையிருந்தால் தாய்வழி பாட்டனின் சகோத வர்க்கத்தார்கள் அந்தச் சொத்துக்களை அனுபவித்து வருவார்கள்.

பிரிவு 6

5-9 ல் ராகு கேது நின்று அல்லது 5 ல் சனி செவ்வாய் இவர்களில் ஒருவர் நின்று 5க்குடையவரும் புதனும் 2-4-5-7-9-10-11 ல் நின்றால் ஒன்று அல்லது 2 மாமனிருப்பார் 5க்குடையவர் 5ல் ஆட்சி பெற்று நின்று புதன் மேற்கூறிய ஸ்தானங்களில் நின்றாலும் அல்லது 5 ல் கிரகங்கள் இல்லாதிருந்து 5க்குடையவரும் புதனும் மேற்கூறிய ஸ்தானங்களில் நின்றால் சகோதர பாகத்தில் கூறியுள்ளபடி 3 க்கு 3 ஆமிடத்தைக் கொண்டு எண்ணிவந்து எந்த ஸ்தானத்திற்கு சகோதர தோஷமும் தார தோஷமும் வருகிறதோ அந்த ஸ்தானம் வரை எத்தனை மாமன் என்று பார்க்க வேண்டும் ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தால் மாமனுக்கு ஆகாது என்று கூறுவார்கள். கிரகநிலைப்படிதான் மாமன் பாகத்தைப் பார்க்க வேண்டுமேயன்றி நட்சத்திரத்தினால் மாமனுக்கு எவ்வித தோஷமும் உண்டாகாது.

## 42. தந்தைபாகம் பிரிவு 1

தந்தை ஸ்தானமான 9 ஆமிடம் சுத்தமாக இருந்து அல்லது 9 ல் சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்களில் ஒருவரோ ஒன்றுக்கு மேலானவர்களோ நின்று 9 க்குடையவரும் பிதுர்க்காரகன் சூரியனும் 1-2-4-5-7-910-11 ல் வேறுபாபர்களோடு கூடாமல் நின்றால் தந்தைக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும் 9க்குடையவரும் சூரியனும் சுபர்களோடு

கூடி 6-8-12 ல் நின்று குரு பார்வை பெற்று 9 ஆமிடம் சுத்தமாக இருந்தாலும் தந்தைக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும்.

பிரிவு 2

9 க்குடையவர் 6-8-12 ல் நின்று அந்த லக்கினத்திற்கு 5-10 க்குடையவரோடு கூடி குரு பார்வை பெற்று சூரியன் சனி ராகு கேது இவர்களோடு கூடாமல் எங்கிருந்தாலும் தந்தைக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும் 9க்குடையவரும் சூரியனும் 6-8-12 ல் நின்று 5-10 க்குடையவரோடு கூடி குரு பார்த்தாலும் தந்தைக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும். 9க்குடையவரும் சூரியனும் 6-8-12 ல் சனி ராகு கேது இவர்களோடு கூடி நின்று குரு பார்த்தாலும் தந்தைக்கு தீர்க்காயுளைக் கொடுக்கும். ஆனால் தந்தையோடு உறவாக இருக்க மாட்டார் உதவிகளும் செய்யமாட்டார். சூரியன் 5-9ல் சனி ராகு கேது இவர்களோடு கூடி நின்று 9க்குடையவர் 1-4-5-7-9-10- 11 ல் வேறு கிரகங்கள் கூடாமலும் பார்க்காமலுமிருந்தால் தந்தைக்கு தோஷமுண்டாகாது அருனால் தந்தைக்கும தனக்கும் பகை உண்டாகி பாகப்பிரிவினை செய்து கொண்டு போய்விடுவார். மேற்கூறியபடி. கிரக நிலை உள்ளவர்கள் உத்தியோகம் காரணமாக வெளிநாட்டில் அல்லது வெளிமாநிலத்திருப்பவர்கள் தந்தையோடு உறவாகவும் உதவி செய்து கொண்டுமிருக்கிறார்கள். தந்தையோடு ஒட்டியிருப்பவர்களுக்குத்தான் இது பொருந்தும்.

பிரிவு 3

9 க்குடையவரும் சூரியனும் 6-8-12 ல் சனி ராகு கேது இவர்களோடு கூடி நின்று தாய்ஸ்தானமான 4 ஆமிடத்திற்கு 7 க்குடையவர் 4 ஆமிடத்திற்கு 6-8-12 லிருந்தாலும் நீசம் பெற்றிருந்தாலும் தாயக்கு கணவனில்லை எந்ற அமைப்பும் இருந்தால் தந்தை இறந்து போவார். மாதுருபாகம் பிரிவு 7 ல் கூறியபடி தந்தைக்கும் தாரதோஷமிருந்து மனைவியை இழந்து விடுவார் என்று இருவருக்கும் தார தோஷமிருந்தால் தந்தைக்கு தோஷம் உண்டாகாது இருவரும் பிரிந்திருப்பார்கள்.

## பிரிவு 4

பிரிவு 1ல் கூறியபடி தந்தைக்கு தோஷமில்லை என கிரகநிலையிலிருந்து பிரிவு 3ல் கூவியபடி தாய் ஸ்தானத்தி மட்டும் தாரதோஷமிருந்தால் தாய்க்கு வரன் இருந்து தடைப்பட்டே நிச்சயமாகி நின்று போயோ குழப்பங்கள் உண்டாகியோ தாய்க் திருமணம் நடந்திருக்கவேண்டும். இல்லையேல் தாய் தந் காந்தர்வ மணம் செய்து கொண்டவர்களாக இருக்கவேண்டு இவ்வாறு இல்லாவிடில் மாதுருபாகம் பிரிவு 7ல் இறுதி கூறியுற்றபடி தாய்க்கு அமைந்துவிடும்.

## 43. நட்சத்திரங்களினால் தாய் தந்தைக்கு உண்டாகு பலன்கள்.

ஞாயிற்றுக்கிழமை பரணி நட்சத்திரத்திலும் திங்கட்கிழமை சித்திரை நட்சத்திரத்திலும் செவ்வாய்க்கிழமை உத்திராட நட்சத்தி திலும் புதன் கிழமை அவிட்ட நட்சத்திரத்திலும் வியாழக்கிழமை கேட்டை நட்சத்திரத்திலும் வெள்ளிக்கிழமை பூராட நட்சத்தி திலும் சனிக்கிழமை ரேவதி நட்சத்திரத்திலும் குழந்தை பிறந்தா தாய் தந்தைக்கு அதிக துன்பத்தைக் கொடுக்கும். என்றும் பூராடம் ஆம் பாதத்திலும் பூசம் 2-3 ஆம் பாதத்திலும் சித்திரை 1-2 ஆ பாதத்திலும் உத்திரம் 1 ஆம் பாதத்திலும் குழந்தை பிறந்தால் தா தந்தை இறந்து போவார்கள் என்று சோதிட நூல்களில் கூற பட்டுள்ளது. இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை. கிரக நிலைப்ப தான் தாய் தந்தைக்கு பலன்கள் நடந்து வருமேயன்றி நட்சத்திரப் பலன் நடக்காது.

## 44. களத்திரபாகம் பிரிவு 1

களத்திரம் என்பது கணவன் மனைவி இருவரையும் குறி பவையாகும். களத்திர ஸ்தானம் 7 ஆமிடமாகும். 7ல் சனி செவ்வா அல்லது சனி ராகு அல்லது சனி கேது அல்லது செவ்வாய் ரா அல்லது செவ்வாய் கேது நின்று 2-7 க்குடையவர் 6-8-12 ல் ஆட் உச்சமின்றி குரு பார்வை சேர்க்கையில்லா திருந்தால் வலிமையா தார தோஷமாகும்.

### பிரிவு 2

7ல் மேற்கூறிய படி 2 பாபர்கள் நின்று 7 க்குடையவர் நீசம் பெற்று 2 க்குடையவர் 6-8-12 ல் நின்று 7 ஆமிடத்தையும் 7க்குடையவரையும் குரு பாராமலிருந்தால் வலிமையான தார தோஷமாகும். 7ல் சனி செவ்வாய் இவர்களில் ஒருவர் நின்று 2-8ல் ராகு கேது நின்று 7க்குடையவரும் 2-8 க்குடையவரும் நீசம் பெற்று நின்றால் வலிமையான தார தோஷமாகும். 7ல் சனி செவ்வாய் இவர்களில் ஒருவர் நின்று 2-7க்குடையவர் 6-8-12 ல் நின்று 7க்குடையவரோடு ராகு கேது கூடி நின்று குரு பார்வை சேர்க்கையில்லாதிருந்தால் வலிமையான தார தோஷமாகும்.

### பிரிவு 3

2-7 க்குடையவர் 6-8-12நின்று 7ஆமிடம் சுத்தமாக இருந்து 7 க்குடையவரோடு சனி ராகு கேது கூடி நின்றால் தார தோஷமாகும். 7 ல் சனி செவ்வாய் ராகு கேது இவர்களில் ஒருவர் நின்று 2-7க்குடையவர் 1-2-4-5-7-9-11 ல் நின்று 7க்குடையவ ரோடு சனி ராகு கேது கூடி நின்றால் தார தோஷமாகும். 7 ஆமிடம் சுத்தமாகவும் 7க்குடையவர் 6-8-12ல் ஆட்சி உச்சம் பெற்று ராகு கேது கூடி நின்று 2-8ல் செவ்வாய் சனி நின்றால் தார தோஷமாகும். இவைகள் யாவும் சாதாரண தார தோஷமாகும். 7க்குடையவர் 7ல் ஆட்சி பெற்று சனி, செவ்வாய், இவர்களில் ஒருவர் சேர்ந்து நின்று 2-8ல் ராகு கேது நின்றாலும் அல்லது 7ல் ராகு கேது நின்று 2-8 ல் சனி செவ்வாய் நின்றாலும் சாதாரண தார தோஷமாகும்.

### பிரிவு 4

2-7 க்குடையவர் ஆட்சி உச்சம் பெற்று 7 ஆமிடம் சுத்தமாக இருந்தால் தார தோஷமில்லை. 2-7 க்குடையவர் 1-2-4-5-7-9-10-11 ல் நின்றால் தார தோஷமில்லை. மேற்கூறிய படி கிரக நிலையிருந்து சனி ராகு கேது கூடி நின்று குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் தாரதோஷமில்லை. குரு பார்வை சேர்க்கையில்லாதிருந்தாலும் சில வரன்கள் அல்லது பெண்களைப் பார்த்து தடை உண்டாகி விவாகம் நடக்குமேயன்றி தார தோஷமுண்டாகாது.

## 45. திருமணப் பொருத்தம் பற்றிய விபரம் பிரிவு 1

களத்திர பாகம் பிரிவு 1-2ல் கூறியுள்ளபடி ஆண் பெண் இரு பாலருக்கும் கிரக அமைப்பு உள்ள சாதகமாகப்பார்த்து சேர்க்கவேண்டும். இத்தகைய கிரக நிலை உள்ளவர்கள் பெரும் பாலானவர்கள் காந்தர்வ கலப்பு மணம் செய்து கொள்கிறார்கள் மணம் செய்து கொண்ட மனைவி அல்லது கணவன் இருவரில் ஒருவர் சாதகத்தில் பெரும்பாலும் தார தோஷமிருப்பதில்லை. தாரதோஷமில்லையே எப்படி கலப்பு மணம் செய்து கொண்டார்கள் என்ற குழப்பத்தை உண்டாக்கி விடுகிறது. கலப்பு மணம் செய்து கொள்பவர்களுக்கும் இரண்டிலும் சம தோஷமிருந்து மணம் செய்து கொண்டவர்களுக்கும் முதல் குழந்தை ஆண் குழந்தையாகவே பிறக்கிறது. இல்லையேல் பெண்ணாகவே பிறக்கிறது.

### பிரிவு 2

பிரிவு 1 ல் கூறியுள்ளபடி கிரக நிலை உள்ளவர்கள் கவுரவுஸ்தானமான 10 ஆமிடத்தில் குரு நின்றாலும் 10க்குடையவர் குரு வீட்டிலிருந்தால் 10க்குடையவரோடு குரு கூடி நின்றாலும் பார்த்தாலும் குடும்ப கவுரத்திற்குப்பயந்து நடப்பார்கள். தந்தையின் பராமரிப்பில் இருந்து வருபவர்கள் தந்தைக்கு தோஷமில்லை என்ற கிரக நிலையிருந்தால் தந்தை சொல்லை மீறி நடக்க மாட்டார்கள் சகோகரனின் பராமரிப்பிலிருந்து வருபவர்களுக்கு மூத்த சகோதர தோஷமில்லாதிருந்தால் சகோதரனின் சொல்லை மீறி நடக்க மாட்டார்கள். இத்தகைய அமைப்பு உடையவர்கள் காந்தர்வமணம் செய்து கொள்ள மாட்டார்கள். 10ல் சனி ராகு கேது இவர்களில் ஒருவர் நின்று 10க்குடையவர் சனி வீட்டில் நின்றாலும் அல்லது 10 க்குடையவரோடு ராகு கேது கூடி சனி பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் அத்தோடு தந்தைக்கு தோஷம் மூத்தசகோதர தோஷம் உள்ளவர்கள்தான் காந்தர்வ மணம் செய்து கொள்வார்கள். ஆதலால் தார தோஷமுள்ளவர்கள் எல்லோருமே காந்தர்வமணம் செய்து கொள்வார்கள் என்று கூறமுடியாது.

## பிரிவு 3

களத்திரபாகம் பிரிவு 3ல் கூறியுள்ளபடி ஆண் பெண் இருபாலருக்கும் கிரகநிலைஉள்ள சாதகமாகப்பார்த்து சேர்க்க வேண்டும். இதைப் போலவே பிரிவு 4ல் உள்ள கிரக நிலைப்படி இருவருக்கும் உள்ள சாதகமாகப் பார்த்து சேர்க்க வேண்டும். பிரிவு 1-2ல் உள்ளபடி கிரக நிலை உள்ளவர்களுக்கு விவாகம் நிச்சயமாகி நின்றிருந்தாலும் திருமணமாகி விவாகரத்து ஆகியிருந்தாலும் ஆணுக்கு வயது 35க்கு மேலும் பெண் வயது 30க்கு மேலும் விவாகம் நடக்காமலிருந்தாலும் பிரிவு 3 ல் உள்ளபடி கிரக நிலை உள்ளவர்களைச் சேர்க்கலால் பாதிக்காது. இதைப்போலவே பிரிவு 3ல் உள்ளவர்களுக்கு நடந்திருந்தால் பிரிவு 4ல் உள்ளவர்களைச் சேர்க்கலாம். பாதிக்காது. மேற்கூறிய சம்பவங்கள் எதுவும் நடக்காமலிருந்து பிரிவு 1-2க்குடையவருக்கு பிரிவு 3 ல் உள்ளவர்களைச் சேர்ந்தால் தினசரி சண்டை சச்சரவாக இருக்கும், ஆயுளைப் பாதிக்காது. பிரிவு 4ல் உள்ளவர்களைச் சேர்த்தால் இறந்து போவார்கள். பிரிவு 3க்குடையவருக்கு 4க்குடையவரைச் சேர்த்தால் தினசரி சண்டைச்சச்சரவாக இருக்கும். ஆயுளை பாதிக்காது.

## பிரிவு 4

திருமணப்பொருத்தம் பிரிவு 2ல் கூறியுள்ளபடி காந்தர்வமணம் செய்து கொள்வார்கள் என்ற கிரக அமைப்பு உள்ள சாதகர்களுக்கு ஆணுக்கு வயது 25 க்கு மேல் 30 க்குள்ளும் பெண்ணுக்கு வயது 20 க்கு மேல் 25 க்குள்ளும் 7க்குடையவர் திசையில் 7 க்குடையவர் புத்தியும் 7 ல் நிற்பவர்களின் புத்தியும் அல்லது 7 ல் நிற்பவர்களின் திசையில் சுய புத்தியும் 7 க்குடையவர் புத்தியும் நடந்து வரும் போது விவாகம் நடந்திருக்க வேண்டும். விவாகம் மேற்கூறிய புத்திகளில் நடக்காமலிருந்தால் வேறு யாரையாவது காதலித்துள்ளார்களா என்று விசாரித்துப் பார்த்து

விவாகம் செய்ய வேண்டும். இது களத்திர பாகம் பிரிவு 1-2 ல் கூறியுள்ள படி கிரகநிலையும் திருமணப்பொருத்தம் பிரிவு 2 ல் கூறியுள்ளபடி கிரக நிலையும் உள்ளவர்களுக்குத்தான் பொருந்தும். மற்றவர்களுக்குப் பொருந்தாது.

## பிரிவு 5

சோதிட நூல்களில் 2-7 க்குடையவர் எந்தஸ்தானத்திலிருந்தாலும் களத்திரக்காரகன் சுக்கிரன் 6-8-12 ல் பாவர்களோடு கூடி நின்றாலும் நீசம் பெற்றிருந்தாலும் ஈனஸ்திரீயை மணம் செய்து கொள்வான். சோரஸ்திரீயை மணம் செய்து கொள்வான் என்றும் ஆட்சி உச்ச வீடுகளில் நின்றால் உத்தமஸ்திரீயை மணம் செய்து கொள்வான் என்றும் கூறுகிறது. 7 ல் சுக்கிரன் நின்றால் களத்திரத்திற்குப் பங்கமுண்டாகுமென்றும் கூறுகிறது. இது அனுபவத்தில் ஒத்துவரவில்லை என்பதால் தான் களத்திர பாகத்தில் களத்திரக்காரகன் சுக்கிரனைப் பற்றி குறிப்பிடவில்லை. காரக விஷயத்தில் சகோதரம் மாதுர் பிதுர் புத்திர பாகங்களுக்குறிய காரகர்களின் பலன்கள்தான் ஒத்துவருகிறது. களத்திர பாகத்திற்கு மட்டும் காரகப்பலன் ஒத்துவரவில்லை. மற்றும் உபயலக்கனங்களான மிதுனம் கன்னி தனுசு மீனம் இந்த லக்கினங்களுக்கு 7 க்குடையவர் பாதகாதிபதியானதால் 6-8-12 ல் நின்றால் தோஷமாகாது. தோஷமில்லாத சாதகத்தையும் சேர்க்கலாம் என்றும் கூறுவார்கள். இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை. எந்த லக்கினமாக இருந்தாலும் சரி 2-7 க்குடையவரையும் 7 ஆமிடத்தையும் தான் முக்கியமாகப் பார்க்கவேண்டும். இதில் 2க்குடையவர் எங்கேயிருந்தாலும் சரி 7க்குடையவரைத்தான் முக்கியமாகப்பார்க்க வேண்டும்.

### 46. செவ்வாய் தோஷ விளக்கம்.

செவ்வாய் 2-4-7-8-12 ல் நின்றால் செவ்வாய் தோஷமாகும். செவ்வாய் தோஷம் இருவருக்கும் இருக்க வேண்டும் என்றும் ஒருவருக்கிருந்து ஒருவருக்கில்லாதிருந்தால் தார மரணம்

உண்டாகும் என்று சோதிட நூல்களில் கூறப்பட்டுள்ளது. இதில் 2 ஆமிடம் குடும்பம் 7 ஆமிடம் களத்திரம் 8 ஆமிடம் மாங்கல்ய ஸ்தானங்களாதலால் இந்தஸ்தானங்களில் செவ்வாய் நின்றால் தோஷமாகும். இதில் 7 ல் நிற்கும் செவ்வாய்க்குதான் வலிமை அதிகம். 2-8ல் நிற்கும் செவ்வாய்க்கு அதிக வலிமையில்லை. 4-12ல் நின்று 7 ஆமிடத்தைப் பார்ப்பதால் செவ்வாய் தோஷமென்று கூறுகிறது. 4-12 ல் உள்ள செவ்வாய்க்கு வலிமையே கிடையாது. 2-7-8 ஆமிடம் செவ்வாய்க்கு ஆட்சி வீடாக இருந்து செவ்வாய் நின்றால் தோஷமாகாது. செவ்வாய் உச்ச வீட்டில் நின்று அது 7 ஆமிடமாக வந்தால் தோஷமாகாது என்று கூறுகிறது. இது ஒத்து வராது சனி ராகு கேது போன்ற பாபர்களில் ஒருவர்தான் செவ்வாய். ஆதலால் செவ்வாய் 2-7-8 ல் ஒருவர் சாதகத்திலிருந்தால் 2-7-8 ல் ராகு கேது சனி இவர்களில் ஒருவர் நின்றால் அந்தசாதகத்தைச் சேர்க்கலாம். பாதிக்காது.

47. நட்சத்திரத் திரத்தினால் உண்டாகும் பலன்கள் பிரிவு I

மூலம் மாமனாருக்கும் ஆயில்யம் மாமியாருக்கும் ஆகாது என்றும் கேட்டை மூத்த மைத்துனருக்கு ஆகாது என்றும் கேட்டையில் பிறந்த பெண்ணைக்கேட்டவனுக்கு ஆகாது உடை அதாவது திருவோட்டைக் கொடுக்கும் என்றும் விசாகம் வீட்டைத் துடைத்து விடும். இளைய மைத்துனருக்கு ஆகாது என்றும் பூராடத்தில் பிறந்தவருக்கு நூலாடாது. போராடக் கொண்டி யிருப்பாள் என்றும் சோதிட நூல்கள் கூறுகிறது. இது அனுபவத்தில் ஒத்து வரவில்லை. களத்திரஸ்தானமான 7 ஆமிடத்திற்கு [illegible] ஸ்தானாதிபதிகள் 7க்கு 1-2-4-5-7-9-11 ல் நின்றால் [illegible] மாமனாருக்கு தோஷமுண்டாகாது. இதன்படி கிரக நிலையிருக்கு [illegible] மாமனார் ஸ்தான 3 ஆமிடத்திற்கு 7 ல் ராகு கேது நின்று அவ்வீட்டதிபதி 3க்கு 6-8-12ல் நின்றாலும் நீசம் பெற்றிருந்தாலும் இரு தார மாமனாராகவோ காந்தர்வ மணம் செய்து கொண்டவராகவோ விவாகம் நிச்சயமாகி நின்று வேறு பெண்ணை மணம் செய்து கொண்டவராகவோ சேர்க்கை [illegible]

இருப்பார். மாமி மாமனாருக்கு தோஷமுண்டாகாது. 7க்கு 4-9 க்குடையவர் 7க்கு 6-8-12 ல் நின்று 3 க்கு 7 ஆம் வீட்டதிபதி மேல் கூறிய படியிருந்தால் மாமி, மாமனாருக்கு தோஷமுண்டாகும். 7 ஆமிடத்திற்கு 3-11 ஆமிடத்தைக் கொண்டு களத்திரத்தின் மூத்த இளைய சகோதரங்களுக்கு தோஷமுள்ளதா இல்லையா என்று பார்க்க வேண்டுமேயன்றி நட்சத்திரத்தினால் மைத்துனர்களுக்கு எவ்வித தோஷமும் உண்டாகாது.

பிரிவு 2

ரோகிணி, திருவாதிரை, மகம், அஸ்த்தம், விசாகம், திருவோணம், உத்திராட்டாதி, ரேவதி இந்த நட்சத்திரங்கள் இருவருக்கும் ஒரே நட்சத்திரமாக வந்தால் உத்தமம். விவாகம் செய்யலாம் என்றும் அசுவணி, கார்த்திகை, மிருகசீரிடம், புனர்பூசம், பூசம், பூரம், உத்திரம், சித்திரை, அனுஷம், பூராடம், உத்திராடம் இந்த நட்சத்திரங்கள் இருவருக்கும் ஒரே நட்சத்திரமாக வந்தால் மத்திபம் பாதிக்காது விவாகம் செய்யலாம் என்றும் பரணி, ஆயில்யம், சுவாதி, கேட்டை, மூலம், ஆவிட்டம், சதயம், பூரட்டாதி இந்த நட்சத்திரங்கள் இருவருக்கும் ஒரே நட்சத்திரமாக வந்தால் விவாகம் செய்யக்கூடாது என்றும் சோதிட நூல்களில் கூறப்பட்டுள்ளது. இது அனுபவத்தில் ஒத்துவரவில்லை கிரகப் பொருத்தம் சரியாக இருந்தால் இருவருக்கும் ஒரே நட்சத்திரமாக எந்த நட்சத்திரம் வந்தாலும் ரச்சுதோஷம் பாதிக்காது விவாகம் செய்யலாம் ரச்சுப் பொருத்தம் கயிறு பொருத்தம் என்பதும் ஒன்று தான்.

பிரிவு 3

உத்திரம், உத்திராடம், உத்திராட்டாதி, அஸ்த்தம், சுவாதி, மருகசீரிடம், அனுஷம் இந்த நட்சத்திரங்கள் இருவருக்கும் ஒரே நட்சத்திரமின்றி தனித்தனி நட்சத்திரங்களாக வந்தால் விபத்து, வததோஷங்கள் கிடையாது. கிரகப் பொருத்தம் பார்க்கமாலே விவாகம் செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது. இதுவும் அனுபவத்தில் ஒத்து வரவில்லை

## 48. நட்சத்திரப் பொருத்தம் விபரம்

ரச்சுவர்னது இருவருக்கும் சிரசில் கூடினால் கணவருக்கும் கழுத்தில் கூடினால் மனைவிக்கும் வயிற்றில் கூடினால், புத்திர பாகத்திற்கும் தொடையில் கூடினால் தனத்திற்கும் பாதத்தில் கூடினால் இருப்பிடத்திற்கும் ஆகாது என்றும் இதில் சிரசு கழுத்து தவிர மற்றவை ஏகரச்சுவாக வந்தால் விவாகம் செய்யலாம் என்றும் இருவர் ராசி அதிபதியும் ஒரே கிரகமாக வந்தாலும் ஒருவருக்குகொருவர் மித்துருவாக இருந்தாலும் 7க்கு 7ஆம் ராசியாக வந்தாலும் ஆரோகன அவரோகன ரச்சுவாக வந்தாலும் ரச்சுதேவதை கணம் ஆகிய பொருதங்கள் இல்லாவிட்டாலும் விவாகம் செய்யலாம் என்றும் கூறப்பட்டுள்ளது இவையாவும் நட்சத்திரத்தை வைத்தே பொருத்தம் பார்க்கவேண்டும் என்ற கருத்தில் கூறப்பட்டுள்ளது. கிரக நிலைப்படி பொருத்தங்கள் சரியாக இருந்தால் ஏக ரச்சுவாக வந்தாலும் விவாகம் செய்யலாம் எவ்வித பாதிப்பும் உண்டாகாது. நட்சத்திரப் பொருத்தத்தில் தினம் கணம் மகேந்திரம் ஸ்திரீதீர்க்கம் யோணி ராசி, ராசி அதிபதி வசியம் நாடி இந்த 10 பொருத்தத்தை வைத்துப் பார்த்தாலே போதும் இதுவல்லாது ஓரை, வேதை, சாதி, கணிதம், பஞ்ச, பட்சி, ஆயம், யோகினி லிங்கம் பஞ்ச பூதம், சந்திரயோக கூடம், கோத்திரம் இந்த 11 பொருத்தங்களையும் சேர்த்து 21 பொருத்தங்கள் என்று கூறப்பட்டுள்ளது. இந்த 11ம் முக்கியமான தல்ல முன்கூறிய 10 பொருத்தங்களே முக்கியமானதாகும் பொருத்தம் பார்க்கும் விபரம் பஞ்சாங்கத்தில் உள்ளது

## 49 உறவில் விவாகம் நடக்கும் அந்நிய உறவில் விவாகம் :நடக்குமா என்பதன் விபரம்

2 ஆமிடம் குடும்பஸ்தானம், 7ஆமிடம் களத்திரஸ்தானம் 4க்குடையவர், 2-7ல் நின்றாலும், 2-7க்குடையவரோடு சேர்ந் திருந்தாலும் பார்த்தாலும் 4-11க்குடையவர் சேர்ந்திருந்தாலும் 4க்குடை·வரை 11க்குடையவர் பார்த்தாலும் தாய் வழி உறவிலும் 2-7ல் 9க்குடையவர் நின்றாலும், 2-7க்கு உடையவரோடு 9க்குடையவர் சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் 9ஆமிடத்திற்கு 3-11க்குடையவர்

சேர்ந்திருந்தாலும் பரிவர்த்தனையடைந்திருந்தாலும் 9க்கு 3க்குடைய வரை 9க்கு 11க்குடையவர் பார்த்தாலும் அத்தை வழி உறவிலும் அல்லது அத்தையின் கொழுந்தன் வர்க்கத்திலும் விவாகம் நடக்கும் 3-7க்குடையவர் பரிவர்த்தனை சேர்க்கையிருந்தாலும 3-11க்கு உடையவர் சேர்க்கை பார்வை பரிவர்த்தனையடைந் திருந்தாலும் 3க்குடையவரை 11க்குடையவர் பார்த்தாலும் சகோதரியின் புத்திரி அல்லது சகோதரி, சகோதரன் விவாகம் செய்து கொண்ட உறவிலும் விவாகம் நடக்கும் இந்த அமைப்புப்படி கிரகநிலையிருந்தால் ஒரே வீட்டில் 2 பெண்ணைக் கொடுக்கலாம். பெண்கொடுத்துப் பெண் எடுக்கலாம். ஒரே வீட்டில் 2 பெண்ணைக் கொடுக்கும் போது இரண்டாவது பென் சாதகத்தில் மூத்த சகோதரி தோஷம் மூத்த கொழுந்தன் தோஷமும் இருந்தால் ஒரே வீட்டில் 2 பெண்ணைக் கொடுக்கக் கூடாது. தார தோஷமுள்ள சாதகர்களுக்கு மேற்கூறிய கிரக அமைப்பிருந்தாலும் அந்நிய உறவில் தான மணம் செய்து கொள்ளவிரும்புகிறார்கள், ஆனால் இருவர் சாதகத்திலும் தாரதோஷமிருந்தால் தம்பதிகளாகும் இருவருக்கும் சம்மதமிருந்தால் சேர்க்கலாம் சம்மதமில்லையென்றால் சேர்க்கக்கூடாது. தாரதோஷமில்லாத சாதகமாகயிருந்தால் இருவருக்கும் சம்மதமில்ல விட்டாலும் சேர்க்கலாம் திருமணத்திற்குப்பின் எவ்வித பாதிப்பும் உண்டாகாது.

## 50. திருமணத்திற்குப் பின் யோக பலனைக் கொடுக்கும் சாதகங்களின் விபரம்

ஆண் சாதகத்தில் 7-11 க்குடையவர் பரிவர்த்தனை யடைத்திருந்தாலும் சேர்ந்திருந்தாலும் 7 ஆம் வீட்டதிபதியை 11 க்குடையவர் பார்த்தாலும் 7 ஆம் வீட்டிற்கு 10 ஆம் வீடு சூரியன் சந்திரன் குரு வீடாக இருந்து அவ்வீட்டதிபதிகள் ஆட்சி பெற்று நின்றாலும் அந்த வீட்டை குரு பார்த்தாலும் சூரியன் சந்திரனை குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் 7க்கு 10 ஆம் வீடு வேறு கிரகங்களின் வீடுகளாக இருந்தாலும் அந்த வீட்டில் குரு நின்றாலும் பார்த்தாலும் அவ்வீட்டதிபதியோடு சேர்ந்திருந்தாலும் உத்தியோகம் பார்க்கும்

பெண்ணையோ ஆண் வாரிசு இல்லாத இடத்துப் பெண்ணையோ மணம் சொய்து கொள்ளக்கூடிய வாய்ப்பு உண்டாகும். ஆண் வாரிசு இருந்தாலும் மனைவி மூலமாக நிறைய உதவிகளைப் பெறுவார்கள். இதே அமைப்பு பெண் சாதகத்திலிருந்தால் வசதியில்லாத குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாலும் வசதியான குடும்பமாக ஆகி விடும்.

## 51. விவாகம் செய்து கொள்ளும் குடும்பத்தின் விபரம்

7க்கு 4 ஆம் வீடு களத்திர வர்க்கத்தார்கள் இருக்கும் வீடாகும். அந்த வீட்டிற்கு 10 ஆம் வீடு அவர்களின் கவுரவ ஜீவனஸ்தானமாகும். அது லக்கினத்திற்கு 7 ஆம் வீடாகும். அந்த வீட்டில் குரு நின்றாலும் அவ்வீட்டதிபதி குரு வீட்டில் நின்றாலும் குருவோடு கூடியிருந்தாலும் குரு பார்த்தாலும் அந்த வீட்டில் பொதுத்தொண்டு தெய்வத் தொண்டு தலைவர் பதிவி வகித்தவர்கள் ஒருவர் இருப்பார்கள் இல்லையேல் வீட்டருகில் பொது ஸ்தாபனங்களிருக்கும் 7க்கு 4 ஆம் வீடு லக்கினத்திற்கு 10 ஆம் வீடாகும். அந்த வீட்டிற்கு 7ல் ராகு கேது நின்று அவ்வீட்டதிபதி அந்த வீட்டிற்கு 6-8-12 லிருந்தாலும் நீசம் பெற்றிருந்தாலும் அந்த வீட்டில் இரு தாரக்காரர் புத்திரதோஷமுடையவர். ஆண் சந்ததி இல்லாதவர் ஒருவர் இருப்பார். இது மாமனாரின் சகோதர வர்கத்திலோ தந்தை வர்க்கத்திலோ ஒருவர் இருப்பார். அந்த வீட்டிற்கு 5 ஆம் வீட்டதிபதி அந்த வீட்டிற்கு 6-8-12 ல் நின்றால் அவர்கள் பூர்வீகமான ஊரை விட்டு வேறு ஊரில் வாசம் செய்பவர்களாக இருப்பார்கள்.

## 52. விவாகம் நடக்கும் காலமும் களத்திரமிருக்கும் திசையும்

தோஷமுள்ள ஜாதகத்திற்கு சொன்னபடி திசை அமையாது. எனினும் தார தோஷமுள்ளவர்களுக்கு திருமணத்தின் போது நடந்து வரும் திசாநாதன் திசையிலும் புத்தி நாதன் திசையிலும் சுய புத்தி நடந்து வந்தால் 7 க்குடையவரின் திசைக்கு எதிர் திசையிலும் புத்திநாதன் திசையிலும் களத்திரம் அமைந்திடும். தாரதோஷமில்லாத சாதகர்களுக்கு 7 க்குடையவர் திசையிலும் புத்திநாதன் திசையிலும் களத்திரம் அமைந்துவிடும் 7க்குடையவர் 7ல் நிற்பவர்

7க்குடையவரோடு கூடி நிற்பவர் 7 க்குடையவரை பார்ப்பவர் 7 ஆமிடத்தைப் பார்ப்பவர் இவர்களில் ஒருவருடைய புத்தி நடந்து வரும் காலத்தில் விவாகம் நடக்கும். கோட்சாரப் படி சந்திரனுக்கு 1-2-4-5-7-9-10-11 ல் குரு சஞ்சாரம் செய்யும் காலங்களில் விவாகம் நடக்கும் என்றும் கூறுவார்கள். சந்திரனுக்கு 6-8-12ல் குரு சஞ்சாரம் செய்யும் காலங்களில் விவாகம் நடக்காது என்றும் கூறுவார்கள். திசா புத்தியின்படி விவாகம் செய்யக்கூடிய அமைப்பு இருந்தால் கோட்சாரப்படி பார்க்கத்தேவையில்லை. திசா புத்திக்குறிய வலிமை கோட்சாரத்திற்கு வலிமை கிடையாது. விவாகம் நடக்கும் காலத்தில் நடந்து வரும் புத்திநாதன் 7 க்குடையவருக்கு 6-8 ல் நின்றால் விவாகம் நிச்சயமாகி நின்று வேறு இடத்தில் விவாகம் நடக்கும். தடையில்லாமல் நடந்தால் நிச்சயமான தினத்திற்கும் விவாக தினத்திற்கும் இடையில் தார தோஷமுள்ள சாதகர்களுக்கு இருவர் குடும்பத்தில் யாருக்காவது ஒருவருக்கு மரணமுண்டாகியோ பிரயாணகாலங்களில் விபத்துகள் உண்டாகியோ களவு போயோதான் திருமணம் நடக்கும். தார தோஷமில்லாத சாதகர்களுக்கு முக்கிய உறவினர்கள் நோய் உண்டாகியோ பகை உண்டாகியோ திருமணத்திற்கு வராமலிருந்தோ விவாகம் நடக்கும் மேற்கூறிய சம்பவங்கள் எதுவும் நடக்காமல் விவாகம் நடந்தால் விவாகத்திற்குப்பின் இருவர் குடும்பத்திற்கும் பகை உண்டாகி அந்தப் புத்தி முடியும் வரை தம்பதிகளிருவரும் பிரிந்திருக்க வேண்டிய சூழ்நிலை உண்டாகும். திருமண காலத்தில் இருவருக்கும் ஒரே திசையாக நடந்து வந்தாலும் ஒரே திசை ஒரே புத்தி நடந்து வந்தாலும் திருமணமாகி சில ஆண்டுகளுக்குப் பின் இருவருக்கும் ஒரே திசை வந்தாலும் திசா சந்திப்பு உள்ளது. ஆதலால் விவாகம் செய்யக்கூடாது என்று சோதிடர்கள் கூறி விடுகிறார்கள். இது அனுபவத்தில் ஒத்துவர வில்லை. திசா சந்திப்பு காலங்களில் விவாகம் நடந்தத் தம்பதியர்களின் குடும்பத்தில் தம்பதிகளின் ஒற்றுமையிலும் புத்திர பாகத்திலும் பொருளாதாரத்திலும் எவ்வித குறை பாடுமில்லாமல் வாழ்ந்து வருகிறார்கள். ஆதலால் திசா சந்திப்பினால் எவ்வித பாதிப்பும் உண்டாகாது. விவாகம் செய்யலாம்.

## 53 கணவன் மனைவி பிரிவு உண்டாகும் காரணம்

திருமண காலத்தில் 7 க்குடையவருக்கு 6-8 ல் நிற்கும் புத்திகள் நடக்கும் போது எவ்வித அசம்பாவிதமும் நடக்காமல் திருமணம் நடந்திருந்தால் திருமணத்திற்குப் பின்பிரிவு உண்டாகும் இருவருக்கும் பொருத்தம் சரியாகயிருந்தால் அந்தப் புத்திக்குப் பின் கூடுவார்கள். பொருத்தமில்லாத சாதகமாக இருந்தால் நிரந்தரப் பிரிவு உண்டாகும். களத்திர பாகம் பிரிவு 1-2 ல் உள்ளபடி கிரகநிலை ஒருவருக்கிருந்து பிரிவு 4 ல் உள்ளபடி கிரகிரக நிலை ஒருவருக்கிருந்தால் இருவருக்கும் விவாகம் நடந்திருந்தால் புத்திர பாகமில்லாதிருப்பவர்களும் பெண் சந்ததியாக இருப்பவர்களும் ஒற்றுமையாக இருக்கிறார்கள். ஆண் சந்ததி உண்டானால் இருவருக்கும் பிரிவு உண்டாகி விடுகிறது. இல்லையேல் ஒருவருக்கு மரணம் உண்டாகி விடுகிறது. ஆண் சாதகத்தில் சகோதர பாகம் பிரிவு 9 ல் கூறிய படி கிரக நிலையிருந்து பெண் சாதகத்தில் 7 க்கு 3-11 க்குடையவர்கள் 7 க்கு 6-8-12 ல் நின்றால் கணவரின் சகோதரங்களோடு சேர்ந்திருக்கக் கூடாது. அவர்களுக்கு உதவி செய்யக்கூடாது என்று தனிக்குடித்தனம் போக வேண்டுமென்று கூறும். இதற்கு கணவர் உடன்பட்டு வர மாட்டார். இதன் காரணமாக இருவரும் பிரிந்திருக்க வேண்டிய நிலை உண்டாகும். கணவர் சாதகத்தில் சகோதரங்களுக்கு உதவி செய்யக்கூடாது என்ற கிரக அமைப்பிருந்தால் தனிக்குடித்தனம் போய் விடுவார்கள். பெண் சாதகத்தில் 7க்கு 3ல் ராகு கேது நின்று அவ்வீட்டதிபதி 7க்கு 6-8-12 ல் நின்றால் கணவரின் இளைய சகோதரத்தோடு ஒட்டியிருக்கக் கூடாது என்பது விதியாகும். இத்தகைய கிரக அமைப்புள்ள வர்களுக்கு கணவருக்கு நேர் இளையது ஆண் சகோதரமாக இருந்து படித்து வேலை கிடைக்காமலிருந்தால் வேலை கிடைத்து வெளியேறி விடுவார். பெண் சகோதரியாக இருந்து திருமணமாகாம லிருந்தால் திருமணமாகி வெளியேறி விடுவார். நாத்தி கொழுந்தன் தோஷம் நன்மையையும் செய்து விடுகிறது.

## 54. புத்திர பாகம் பிரிவு 1

புத்திர பாகத்தை இருவர் சாதகத்தையும் வைத்துதான் பார்க்க வேண்டும். ஒருவருக்கு புத்திர தோஷமிருந்து ஒருவருக்கு தோஷமில்லாதிருந்தால் சில கர்ப்ப நஷ்டங்களைக்கொடுத்தோ பிறந்து இறந்து போயோ பின்பு உண்டாகும் புத்திர பாகம் தக்கும் இருவருக்குமே தோஷமிருந்தால் புத்திர பாகமில்லாமல் போய் விடும். முக்கியமாகப் பெண்ணின் பிறந்த சாதகத்தைக் கொண்டு தான் எல்லாபலன்களையும் பார்க்க வேண்டும். ருது சாதகப்படி பலன் ஒத்து வராது. புத்திரஸ்தானமான 5 ஆமிடத்தில் சனி ராகு கேது இவர்களில் ஒருவர் நின்று 5 க்குடையவரும் புத்திரக்காரகன் குருவும் 6-8-12 ல் ஆட்சி உச்சமின்றி நின்றால் புத்திர தோஷமுண்டாகும். மேலே கூறிய படி கிரக நிலையிருந்து குரு வேறு ஸ்தானங்களில் நின்று 5 ஆமிடத்தைப் பார்த்தாலும் அல்லது 11 க்குடையவர் 5 லிருந்தாலும் பார்த்தாலும் 5 க்குடையவரோடு சேந்த்திருந்தாலும் 1 அல்லது 2 பெண் சந்ததிகளைக் கொடுக்கும்.

### பிரிவு 2

5 ல் சனி ராகு கேது இவர்களில் ஒருவர் நின்று 5 க் குடையவர் 1-2-4-5-7-9-10 ல் நின்று 11 க்குடையவர் 5 லிருந்தாலும் பார்த்தாலும் பரிவர்த்தனையடைந்திருந்தாலும் 1 ஆண் 2 பெண் சந்ததி உண்டாகும். முதலில் பெண் சந்ததி உண்டாகும். மேற்கூறிய படி கிரக நிலையிருந்து 5 ஆமிடத்தையோ 5 க்குடையவரையோ குரு பார்த்தால் முதலில் ஆண் சந்ததியும் அடுத்து 2 பெண் சந்ததியும் உண்டாகும். புத்திரஸ்தானாதிபதி ஆண் கிரகங்களின் வீடாக இருந்தால் முதலில் ஆண் 2 பெண் 1ம் பெண் கிரக வீடுகளாக இருந்தால் முதலில் பெண் 2 ஆண் சந்ததிகளைக் கொடுக்கும்.

### பிரிவு 3

5 ல் கிரகமில்லாதிருந்து 5 க்குடையவர் சனி ராகு கேதுவோடு கூடி 1-2-4-5-7-9-10 ல் நின்று 11 க்குடையவர் குரு இவர்களில் பார்வை பரிவர்த்தனை சேர்க்கை உண்டாகியிருந்து 5

க்குடையவர் ஆண் கிரகமாகயிருந்தால் முதலில் ஆண் 2ம் அடுத்து பெண் 1ம் கொடுக்கும் குரு பார்வையில்லாதிருந்தால் முதலில் பெண் 1ம் அடுத்து ஆண் 2ம் கொடுக்கும்.

## பிரிவு 4

சூரியன் செவ்வாய் 5ல் நின்று 5க்குடையவர் 6-8-12ல் நின்று 11 க்குடையவரும் குருவும் சேர்க்கை பார்வை பெற்றிருந்தாலும் அல்லது 5 ஆமிடத்தைப் பார்த்தாலும் மேற்கூறியபடி கிரக நிலையிருந்து 3 க்குடையவர் ஆண் கிரகமாயிருந்து ஆண் ராசிகளிலிருந்தால் ஆண் 3 பெண் 1ம் பெண் ராசிகளிலிருந்தால் ஆண் 2 பெண் 2ம் கொடுக்கும். ஆனால் மூத்த மகன் தம்மோடு ஒட்டியிருக்க மாட்டான். பகை உண்டாகி பிரிந்து போய் விடுவான்.

## பிரிவு 5

5 ஆம் வீடு சூரியன் செவ்வாய் வீடாகயிருந்து 5ல் ஆட்சி பெற்று நின்று 11 க்குடையவர் சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் 3 அல்லது 4 ஆண் சந்ததிகள் உண்டாகும். 5க்குடையவரை குருவும் பார்த்தால் 5 அல்லது 6 ஆண் சந்ததிகள் உண்டாகும். 5க்குடையவர் ஆண் கிரகமாக இருந்து அல்லது ஆண் ராசிக்குடையவராக இருந்து மேஷம் சிம்மம் தனுசு ராசிகளில் நின்று 11 க்குடையவர் குரு. இருவரின் சேர்க்கை பார்வை பெற்றிருந்து அந்த ஸ்தானம் கேந்திர திரிகோண ராசிகளாக இருந்தால் 5 அல்லது 6வரை ஆண் சந்ததிகள் உண்டாகும். பெண் ராசிக்குடையவராக இருந்து மிதுனம் துலாம் மகரம் மீனராசிகளில் நின்றால் ஆண் அதிகமாகவும் பெண் 1 ம் உண்டாகும் மேற்கூறிய ராசிகள் 6-8-12 ஆமிடமாக வந்தாலும் மேற்கூறியபடிதான் உண்டாகும்.

## பிரிவு 6

5ல் குரு தனித்து நின்று அது ஆட்சி உச்சம் நட்பு வீடுகளாக இருந்து 5 க்குடையவர் கேந்திர திரிகோணங்களில் நின்று 11 க்குடையவர் பார்வை சேர்க்கை உண்டாகியிருந்தால் 3 அல்லது 4

சந்ததிகள் உண்டாகும். அதில் ஆண் ஒன்று தானிருக்கும் 6-8-12 ல் நின்றால் ஆண் 1 பெண் 1 அல்லது 2 உண்டாகும். 5ல் குரு பகை நீசம் பெற்று 5க்குடையவர் கேந்திர திரிகோணங்களில் நின்று 11 க்குடையவர் சேர்க்கை பார்வை பெற்றிருந்தாலும் ஆண் சந்ததிக்கு தோஷமுண்டாகும் பெண் 1 அல்லது 2 உண்டாகும் 6-8-12 ல் நின்று 11 க்குடையவர் பார்வை இல்லாதிருந்தால் சந்ததியே இருக்காது.

பிரிவு 7

5ல் ராகு கேது நின்று 5க்குடையவர் பெண் கிரகமாக இருந்து ரிஷபம் கடகம் கன்னி கும்பராசிகளில் நின்று அது கேந்திர திரிகோண ராசிகளாக இருந்து 11 க்குடையவர் சேர்க்கை பார்வை பெற்றிருந்தால் 4 அல்லது 5 பெண் சந்ததிகள் உண்டாகும். ஆண் சந்ததி இருக்காது மேற்கூறிய படி கிரக நிலையிருந்து 5 க்குடையவர் 6-8-12 ல் நின்று குரு நீசம் பெற்றிருந்தாலும் 6-8-12 ல் பகை பெற்றிருந்தாலும் சந்ததியே இருக்காது.

பிரிவு 8

சந்ததியே இருக்காது என்ற கிரக நிலை பெண் சாதகத்திலிருந்து ஆண் சாதகத்தில் புத்திர தோஷமில்லாம லிருந்தால் 2 ஆம் தாரம் செய்து கொண்டால் 2 ஆம் தாரத்திற்கு புத்திர பாகம் உண்டாகும். ஆணுக்கு சந்ததியே இல்லை என்ற கிரக நிலையிருந்து பெண்ணுக்கு புத்திர தோஷமிருந்தாலும் இருவருக்குமே புத்திர தோஷமிருந்தாலும் உறவினர்களின் குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்ள வேண்டிய நிலை உண்டாகும். புத்திர பாகம் பற்றி கிரக நிலையைக் கொண்டும் அனுபவத்தில் நடந்து வந்ததைக் கொண்டும் கூறப்பட்டுள்ளது. ஆயினும் குழந்தைகள் பிறந்த பின்னால் குழந்தைகளின் சாதகப்படி மாற்றங்களும் உண்டாகிறது. ஆதலால் சகோதர பாகம் பிரிவு 12 ல் கூறியுள்ளபடி நன்கு ஆராய்ந்து காலத்திற்கு ஏற்றவாறு புத்திர பாகம் பற்றி கூற வேண்டும். 5 க்குடையவர் 5ல் நிற்பவர் 5 க்குடையவரோடு கூடி நிற்பவர் 5 ஆமிடத்தைப் பார்ப்பவர். இவர்களின் திசை

புத்திகளிலும் புத்திரபாகமுண்டாகும். 7 ஆமிடத்திற்கு 5 ஆமிடத்தைக் கொண்டும் புத்திரபாகம் உண்டாவதைக் கூறலாம்.

## 55. காலற்ற உடலற்ற தலையற்ற நாள்

கார்த்திகை உத்திரம் உத்திராடம் இந்த 3 நட்சத்திரங்களின் 1 ஆம் பாதம் ஒரு ராசியிலும் மற்ற 3 பாதங்கள் ஒரு ராசியிலும் வருவதால் இந்த 3 நட்சத்திரங்களுக்கும் கால் இல்லை என்றும் மிருக சீரிடம் சித்திரை அவிட்டம். இந்த 3 நட்சத்திரங்களின் முன் 2 பாதம் ஒரு ராசியிலும் பின் 2 பாதம் ஒரு ராசியிலும் வருவதால் இந்த 3 நட்சத்திரங்களுக்கும் உடல் இல்லை என்றும் புனர்பூசம், விசாகம், பூரட்டாதி இந்த 3 நட்சத்திரங்களின் முன் 3 பாதம் ஒரு ராசியிலும் 4 ஆம் பாதம் ஒரு ராசியிலும் வருவதால் இந்த 3 நட்சத்திரங்களுக்கும் தலை இல்லை என்றும் இவை 9ம் காலற்ற உடலற்ற தலையற்ற நாள் என்றும் இந்த நட்சத்திரங்க்ளில் கிரகாரம்பம் செய்தால் வீடு கட்ட முடியாது என்றும் பிரயாணம் போனால் போன காரியம் நடைபெறாது என்றும் சாந்தி முகூர்த்தம் வைத்தால் புத்திர பாகம் உண்டாகாது என்றும் சோதிட நூல்களில் கூறப்பட்டுள்ளது. இது அனுபவத்தில் ஒத்துவரவில்லை.

## 56. வீடு நிலம் வாகனம் பற்றிய விபரம் பிரிவு 1

4 ஆமிடம் வீடு நிலம் வாகனம் பற்றியஸ்தானமாகும். 4 ஆமிடத்திலும் 10 ஆமிடத்திலும் 1-2-4-5-7-9-10-11 க்குடையவர்கள் நின்று அந்த லக்கினத்திற்கு சுபர்களின் சாரத்திலிருந்து இவர்களுடைய திசை புத்தி வரும் காலத்திலும் 4-10க்குடையவர்கள் புத்தியிலும் வீடு நிலம் வாகனம் அமையும் 4 ஆமிடத்திற்கும் 4 க்குடையவருக்கும் 6-8லிருப்பவர்கள் புத்தியில் வீடு மாற்றம் செய்தல் வீடு மனை நிலம் விற்பனை செய்து மாற்றி அமைத்தல் வாகன மாற்றம் உண்டாகுதல் போன்ற பலன்களைக்கொடுத்து வரும். வீடில்லாதவர்களுக்கு வீடு வாங்க வேண்டிய அமைப்பும் உண்டாகும் 6-8-12க்குடையவர் ராகு கேது இவர்களின் திசை புத்தி நாதர்கள் 4 க்கும் 4 க்குடையவருக்கும் 6-8 ல் நின்றால் அவர்களின்

புத்திகள் நடந்து வரும் காலத்தில் வீடு நிலம் வாகனங்களை கடனுக்காக விற்றுக் கொடுக்க வேண்டிய நிலை உண்டாகும். வீடு, நிலம் இல்லாதவர்கள் வெளியூருக்குச் சென்றாலும் வெளிநாடு சென்றாலும் சம்பாதித்து வீடு நிலம் அமையக் கூடிய அமைப்பும் உண்டாகிறது.

## பிரிவு 2

6-8-12 க்குடையவர்கள் 4-10 ல் நின்று அவர்களின் திசை வந்தால் சுய புத்தியில் வீடு வாங்கிட அமைப்பு உண்டாகும். இத்தகைய அமைப்புடையவர்கள் கடன் வாங்கியோ தொழில் முதலீட்டை எடுத்தோ வாங்க வேண்டிய நிலை உண்டானால் அடுத்து வரும் புத்திநாதர்கள் 4 க்கும் 4 க்குடையவருக்கும் 6-8 ல் இல்லாமலிருந்தால் வாங்கலாம். 6-8 லிருந்தால் வாங்கக்கூடாது. வாங்கினால் வாங்கிய கடன் அடைபடாமல் வீட்டை விற்க வேண்டிய நிலையும் தொழிலை நிறுத்த வேண்டிய நிலையும் உண்டாகும். பொதுக் குடும்பத்தில் பிரிவு உண்டாகும்.

## பிரிவு 3

கூட்டு சேர்ந்து வீடு நிலம் வாகனம் கடைகள் வாங்க வேண்டுமென்றால் இவைகளின் கூட்டாளி ஸ்தானமான 4 ஆமிடத்திற்கு 7 ஆமிடத்ததிபதி 4 ஆமிடத்திற்கு 6-8-12ல் ராகு கேது சனி இவர்களில் ஒருவரோடு கூடி நின்றால் கூட்டு சேர்ந்து வாங்கக் கூடாது. வாங்கினால் பிரச்சினைகள் உண்டாகிக் கொண்டேயிருக்கும். 1-2-4-5-7-9-10-11 லிருந்தால் கூட்டு சேர்ந்து வாங்கலாம். 4ல் ராகு கேது நின்று சுபர்களின் சாரம் பெற்று குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் இவர்களின் திசையில் வீடு நிலம் வாகனம் அமையும் மற்ற புத்திநாதர்கள் எங்கிருந்தாலும் அவர்களின் புத்திகளில் எவ்வித பாதிப்பும் உணாடாகாது. 4ல் ராகு கேது நிற்பவர்களுக்கு கோணலான வீடு நிலம் கடையிருந்தாலும் முச்சந்தி நாற்சந்தி வீதிகளின் மூலையிலிருந்தாலும் வீதிகுத்தல் இருந்தாலும் பாதிக்காது. நன்மையான பலனையே கொடுத்து வரும். வீடு நிலம்

வாகனம் கடை முதலியவற்றை வாங்கும் போது அவற்றின் உரிமையாளரின் குடும்ப வரலாறை 4 ஆமிடத்தை லக்கினமாக வைத்து களத்திர பாகத்தில் விவாகம் செய்து கொள்ளும் குடும்பத்தின் விபரம் என்ற பகுதியில் கூறப்பட்டுள்ள அமைப்பு ஒத்து வரும். இதைப் போலவே கூட்டு சேர்ந்து தொழில் செய்பவர்களுக்கும் அந்த ஸ்தாபனத்தின் உரிமம் யார் பெயருக்கு உள்ளதோ அவரின் வரலாறையும் கம்பணிகளில் பணிபுரிபவர்களின் கம்பனி மேனேஜர் வரலாறையும் உத்தியோகத்திலிருப்பவர்கள் தமக்கு மேலுள்ள அதிகாரிகளின் வரலாறையும் 10 ஆமிடத்தை வைத்துப் பார்த்தால் ஒத்து வரும் கம்பெனிகளில் பணிபுரிபவர்களுக்கும் உத்தியோகத்திலிருப்பவர்களுக்கும் மேற்கூறிய அமைப்பு இருந்தால் தவறுகள் செய்திருந்தாலும் கண்டு கொள்ள மாட்டார்கள். மேற்படி அமைப்பில்லாதிருந்தால் சதாகுறை கூறிக் கொண்டேயிருப்பார்கள்.

## 57. தொழில் ஸ்தானம்

### பிரவு 1

குரு சூரியன் சந்திரன் மூவரும் ராஜ கிரகங்களாகும். இதில் குருவுக்கு முழு பலமும் சூரியனுக்கு முக்கால் பலமும் சந்திரனுக்கு அரை பலமும் உடையவராவார்கள். இவர்கள் தொழில் ஜீவனஸ்தானமான 10 ஆமிடத்திலிருந்தாலும் 10 க்குடையவரோடு கூடி நின்றாலும் 10 ஆமிடத்தையோ 10 க்குடையவரையோ பார்த்தாலும் ராஜபதவி அல்லது ராஜனுக்குச் சமானமான வாழ்க்கை அமையும். அவரவர்கள் பெலத்திற்கு ஏற்றவாறு பலன் கொடுப்பார்கள்.

### பிரிவு 2

10 ஆம் வீடு குரு வீடாக இருந்து 10 — 4 ல் குரு சூரியன் சந்திரன் மூவரும் கூடி நின்றாலும் 10 ல் சூரியன் சந்திரன் நின்று குரு பார்த்தாலும் அமைச்சர் பதவி கிடைக்கும். இவர்களோடு சனி ராகு கேது இவர்களில் ஒருவர் கூடி நின்றால் துணை அமைச்சர் பதவி கிடைக்கும் அல்லது அமைச்சருக்குச் சமானமான உத்தியோகம்

கிடைக்கும். இவர்களுக்கு குரு சூரியன் சந்திரன் அந்த லக்கினத்திற்கு சுபர்களாயிருந்து சுபர்களின் சாரம் பெற்று திசை நடந்து வந்தால் அதியோகப்பலனாகவும் கொடுக்கும். பாபர்களின் சாரம் பெற்றிருந்தால் சமயோகப் பலனாகவும் மற்றவர்களின் திசை நடந்து வந்தால் சமபலனாகவும் கொடுத்து வரும்.

பிரிவு 3

10 ஆமிடத்தில் 2-11 க்குடையவர் நின்று குரு பார்த்தாலும் 10-11 க்குடையவர் 2 ல் நின்று குரு பார்த்தாலும் வக்கீல் நீதிபதி ஆசிரியர் பேங்க் இன்ஷூரன்ஸ் ட்ரஸ்ஸரி வரிவசூல் துறை போன்ற தொழில்கள் அமைந்திடும். மற்றும் கமிஷன் ஏஜன்ட் வட்டிக் கடை சிட்பண்ட் பைனான்ஸ் போன்ற தொழில்களில் முன்னேற்ற முண்டாகும்.

பிரிவு 4

2 க்குடையவரும் புதனும் 10 ல் நின்று குரு பார்த்தாலும் இம்மூவரும் 10 ல் நின்றாலும் தாய்மொழியில் உள்ள இலக்கியம் இலக்கணம் இதிகாசங்களில் தேர்ச்சி பெற்று அது சம்மந்தப்பட்ட துறையில் பணிபுரிந்திட அமைப்பு உண்டாகும் மற்றும் வாக்குத்திறமையால் சிறந்த பேச்சாளராகவும் கதை கவிதைகள் எழுதி புத்தகம் வெளியிடுதல் புத்தகக்கடை போன்ற தொழில்களில் முன்னேற்றமுண்டாகும். சோதிடத்துறையிலும் ஈடுபாடு உண்டாகும். மேற்கூறிய அமைப்புப்படி கிரக நிலையிலிருந்து 10 ஆம் வீடு புதன் குரு வீடாக இருந்தாலும் 10 க்குடையவரும் புதனும் கூடி குருவீட்டில் நின்று 2க்குடையவரும் குருவும் கூடி புதன் வீட்டில் நின்று 2க்குடையவரும் புதனும் பார்த்தாலும் கூடி நின்றாலும் சோதிடத்துறையில் புகழ் உண்டாகும்.

பிரிவு 5

10-4 ல் சனி ராகு கேதுவோடு கூடி நின்று 4-10 க்குடையவர்கள் சேர்ந்திருந்தாலும் பரிவர்த்தனையடைந் திருந்தாலும் அவரவர்கள் வீட்டில் ஆட்சி பெற்றிருந்தாலும் 10-4க்

குடையவர் சனி ராகு கேது இவர்களில் ஒருவர் கூடி எந்த ஸ்தானத்திலிருந்தாலும் எஞ்சினிரிங் துறையில் ஆட்டோ மொபைல்ஸ் ஸிவில் மெக்கானிகல் போன்றத் துறையில் பணிபுரிந்திட அமைப்பு உண்டாகும். மற்றும் வாகனத் தொழில் வாகனங்களுக்குத் தேவையான பொருள்கள் வீடுகட்டுவதற்குத் தேவையான பொருள்களை தயார் செய்தல் மேற்படி பொருள்களை விற்பனை செய்தல் போன்ற தொழில்களில் அபிவிருத்தி உண்டாகும்.

பிரிவு 6

10 ல் புதன் ஆட்சி பெற்றிருந்து ராகு கேது கூடி நின்று சனி பார்த்தாலும் 10 க்குடையவரோடு கூடி எந்த ஸ்தானத்திலிருந்தாலும் கம்ப்யூட்டர் துறை பொறியியல் துறை வான ஆராய்ச்சித்துறை போன்ற ஒன்றில் பணி புரிந்திட அமைப்பு உண்டாகும். மற்றும் மேற்கூறிய எந்திரங்களை தயார் செய்தல் பழுது பார்த்தால் விற்பனை செய்தல் புதுமையான பொருள்களைக் கண்டுபிடித்து விற்பனை செய்தல் போன்ற தொழில்களில் அபிவிருத்தி உண்டாகும்.

பிரிவு 7

10-4 ல் செவ்வாய் நின்றாலும் 10 க்குடையவரோடு செவ்வாய் கூடி நின்றாலும் பாலிடெக்னிக்கல் ஐடிஐ ராணுவம் போலீஸ் மின்சாரத்துறைகளில் தொழில் அமைந்திடும் 4க்குடையவரும் செவ்வாயும் 10-4 ல் நின்றாலும் இருவரும் 10 க்குடையவரோடு கூடி நின்றாலும் ரெவின்யூ ஹவுஸிங் போர்டு டிரான்ஸ்போர்ட்டு போன்றவற்றில் தொழில் அமைந்திடும். மற்றும் நில புரோக்கர் வாகன புரோக்கர் கட்டிடக் கான்ட்ராக்டர் கட்டிடத் தொழில் டிரைவர் செங்கல் சுண்ணாம்புக் காளவாய் போனற தொழில்களில் முன்னேற்றமுண்டாகும்.

பிரிவு 8

2 க்குடையவரும் புதனும் கூடி 10-4 ல் நின்றாலும் 10 க்குடையவரோடு கூடி நின்றாலும் பார்த்தாலும் தபால் தந்தி டெலிபோன் தூதுவர் பத்திரிகை நிருபர் போன்ற துறைகளில்

பணிபுரிந்திட அமைப்பு உண்டாகும். 2-10 க்குடையவர் குரு வீட்டிலிருந்தாலும் குருவோடு கூடி நின்றாலும் பார்த்தாலும் அர்ச்சகர் தொழில் ஆலய அதிகாரி கோர்ட் போன்றவற்றில் பணிபுரிந்திட அமைப்பு உண்டாகும். மற்றும் அரசியல் கட்சியில் தலைவர் பதவி ஊரின் தலைவர் பதவி ஊரின் நிர்வாகத் துறையில் பணிபுரிந்திடவும் அமைப்பு உண்டாகும்.

## பிரிவு 9

10 ல் புதன் செவ்வாய் நின்று 10 க்குடையவர் புதன் செவ்வாய் வீட்டில் நின்றாலும் இம்மூவரும் கூடி எங்கேயிருந்தாலும் மருத்துவத்துறையில் தேர்ச்சிபெற்றிட அமைப்பு உண்டாகும். மேற்கூறிய அமைப்புப்படி கிரகமிருந்து 10 ஆமிடத்திலோ அல்லது 10 க்குடையவரோடோ சூரியன் நின்றால் பல் எலும்பு சந்திரன் நின்றால் சிறுநீரகம், செவ்வாய்க்கு ரத்தப் பரிசோதனை ரத்தக்காயம் புதனுக்கு நரம்பு தோல் குருவுக்கும் 5 க்குடையவருக்கும் மகப்பேறு சுக்கிரனுக்கு கண் காம நோய் பெரும்பாடு சனிக்கு நரம்பு காச நோய் ஆஸ்த்துமா ராகுவுக்கு புற்று நோய் கட்டி பிளவை கேதுவுக்கு மூளை இதயம் போன்ற பிரிவுகளில் பயிற்சி பெற்றால் தொழிலில் முன்னேற்றத்தைக் கொடுக்கும். அதில் சனி செவ்வாய் ராகு கேது நால்வருக்கும் ஆப்ரேஷன் பிரிவிலும் எந்திரச்சிகிச்சை பிரிவிலும் முன்னேற்றத்தைக் கொடுக்கும் மருந்து வியாபாரமும் செய்யலாம்.

## பிரிவு 10

10-4 ல் செவ்வாய் சந்திரன் நின்று 10 க்குடையவர் பார்த்தாலும் கூடி நின்றாலும் விவசாயத்துறை நிலத்தடி நீர் ஆராய்ச்சித்துறை வாட்டர்போர்டு போன்றத் துறையில் பணிபுரிந்திட அமைப்பு உண்டாகும். மற்றும் பால் வெண்ணை நெய் ஹோட்டல் தேங்காய் கனிவர்க்கம் வாசனை திரவியம் குளிர் பானம், புளி வெள்ளம், புஷ்பம் எண்ணெய் தானிய வியாபாரம் போன்ற தொழில்களில் முன்னேற்ற முண்டாகும் சந்திரன் இல்லாமல் செவ்வாய் சனி கூடி மேற்கூறிய அமைப்புப்படியிருந்தால் மீன் மாமிசம் முட்டை வியாபாரத்தில் முன்னேற்றமுண்டாகும்.

## பிரிவு 11

10 ஆம் வீடு சனி செவ்வாய் வீடாக இருந்து இவர்களோடு சந்திரன் சுக்கிரன் கூடி நின்றாலும் 10-4 ல் நின்றாலும் மதுபானம் போதைப்பொருள் வியாபாரமும் சனி செவ்வாயோடு ராகு கேது கூடி நின்றால் விஷமருந்து கெமிக்கல் சம்மந்தப்பட்ட பவுடர் சாயப் பொருள் வியாபாரமும் மந்திரம் மாந்திரீகம் போன்ற தொழில்களில் முன்னேற்றமுண்டாகும். இவர்களுக்கு சனி ராகு கேது திசைகள் நடந்து வந்தால் அரசுக்கு விரோதமான தொழில்களில் ஈடுபட்டு பிரமுகர்களாகிறார்கள்.

## பிரிவு 12

10 ல் சூரியன் சுக்கிரனின்றாலும் 10 க்குடையவரோடு கூடி நின்றாலும் 10 க்குடையவர் சூரியன் சுக்கிரன் வீட்டில் நின்றாலும் ஜவுளி நூல்பருத்தி அலங்காரப் பொருள்கள் தையல் பவுலூம் முதலியத் தொழில்களில் முன்னைற்றம் உண்டாகும். 10 ல் சுக்கிரன் புதன் நின்றாலும் 10 க்குடையவர் சுக்கிரன் புதன் வீட்டில் நின்றாலும் ஓவியம் சிற்பம் செய்தல் நாட்டியம் நாடகம் சினிமா டிவி டெக் போன்ற தொழில்களிலும் மேற் கூறியவற்றிற்குத் தேவையான பொருள்களை வைத்து வியாபாரம் செய்தாலும் முன்னேற்ற முண்டாகும். 10 ல் புதன் சனி நின்றாலும் 10க்குடையவர் சனியோடு கூடி புதன் வீட்டில் நின்றாலும்அல்லது புதனோடு கூடி சனி வீட்டில் நின்றாலும் அச்சகம் டைப் விளையாட்டுத்துறை போன்ற தொழில்களில் முன்னேற்றமுண்டாகும். 10 க்குடையவர் குரு சுக்கிரனோடு கூடி குரு வீட்டிலிருந்தாலும் சுக்கிரன் வீட்டிலிருந் தாலும் 10 ல் குரு சுக்கிரன் நின்றாலும் நகைக்கடை ரத்தின வியாபாரம் பாத்திர வியாபாரம் போன்ற தொழில்களில் முன்னேற்ற முண்டாகும். இது வல்லாது கிரக காரகர்களுக்கு என்ன தொழில் கூறப்பட்டுள்ளதோ அந்த கிரகம் 10 க்குடையவராக வந்தால் அவர்களுக்குறிய தொழில்களும் முன்னேற்றத்தைக் கொடுக்கும். மூதாதையர்கள் செய்து வந்த தொழிலை பின்பற்றி நடத்தி வருபவர்களுக்கும் குலத்தொழில் செய்து வருபவர்களுக்கும் இது பொருந்தாது.

**58. தொழில் அமையும் காலமும் மாற்றமுண்டாகும் காலமும்.**

1-4-5-7-9-10-11 க்குடையவர்கள் லக்கினத்திற்கு 5-9-10 க்குடையவர்களின் சாரம் பெற்று 4-10ல் நின்று அவர்களின் திசைபுத்திகள் நடக்கும்போதும் 4 க்குடையவரோடு திசாநாதன் கூடி 10 ஆமிடத்திற்கு கேந்திர திரிகோணம் தன லாபஸ்தானங்களில் நின்று இவர்களின் திசைபுத்திகள் நடக்கும் போதும் புத்தி நாதர்கள் 4-10 ல் நின்றாலும் 4-10க்குடையவரோடு நின்றாலும் அவர்களின் புத்தியில் உத்தியோகம் அமைதல் புதிய தொழில் ஆரம்பித்தல் போன்ற பலனைக் கொடுத்திடும் 10ஆமிடத்திற்கும் 10க்குடைய வருக்கும் 6-8 லிருக்கும் புத்திகள் நடந்து வரும் காலங்களில் உத்தியோகத்திலிருப்பவர்களுக்கு இடமாற்றமுண்டாகும். வியாபாரி களுக்கு கூட்டாளி அடியாட்கள் விலகிப் போவார்கள். அல்லது சாதகரே விலகி வந்து சுயமாக தொழில் ஆரம்பித்திடவும் வாய்ப்பு உண்டாகும். 3-6-8-1-2 க்குடையவர்களின் திசைகள் நடந்து வந்தாலும் திசாநாதர்கள் 5-9-10 க்குடையவர்களின் சாரம் பெற்று மேற்கூறிய ஸ்தானங்களில் நின்றாலும் அவர்களின திசை புத்திகளில் தொழிலை பாதிக்காது. 10 ஆமிடத்திற்கும் 10 க்குடையவருக்கும் 6-8 ல் நிற்கும் புத்திகள் நடந்துவரும் காலத்தில் தொழில் செய்யும் இடமாற்றம் உண்டாகும். இல்லையேல் அந்த புத்தி முடியும் வரை தொழில் மந்தம் உண்டாகும். 3-6-8-12 க்குடையவர்கள் 3-6-8-12 க்குடையவர்களின் சாரம் பெற்று இவர்களின் திசை புத்தி நடந்து வரும் போது புத்திநாதர்கள் 10 ஆமிடத்திற்கும் 10 க்குடையவருக்கும் 6-8 லிருந்தால் தொழில் முறிவு உண்டாகும். உத்தியோகத்திலிருப்பவர்களுக்கும் இது பொருந்தும். ராகு கேது சுபர்களின் சாரம் பெற்று சுபஸ்தானங்களில் நின்றால் இவர்களின் திசையில் நல்ல பலனையே கொடுத்து வரும் 6-8-12 க்குடையவர்களின சாரம் பெற்று ராகு கேது திசை நடந்து வரும் போது திசாநாதனுக்கும் 10 க்குடையவருக்கும் சனி 6-8 ல் நின்று சனி புத்தி நடந்து வரும் காலங்களில் சனி 6-8-12 க்குடையவராக இருந்து

6-8-12 க்குடையவர்களின் சாரம் பெற்று சனி திசை நடந்து வரும்போது திசாநாதனுக்கும் 10 க்குடையவருக்கும் 6-8ல் ராகு கேது நின்று இவர்களின் புத்தி நடந்து வரும் காலங்களில் தொழில் முறிவு அதிக நஷ்ட்டத்தை உண்டாக்கும். உத்தியோகத்திலிருப் பவர்களுக்கு தொழில் முறிவு உண்டாகி நீதி மன்றத்தில் வழக்குத் தொடர வேண்டிய நிலை உண்டாகும். மேற்கூறியபடி புத்திகள் நடந்து வரும் காலத்தில் 7½ ச் சனியும் நடந்து வந்தால் களவு போதல் தீயினாலோ கலவரங்களினாலோ சொத்துக்களுக்கு சேதத்தை உண்டாக்கும் உத்தியாகத்திலிருப்பவர்களுக்கு வழக்கு ஜெயிக்காது. கூட்டு சேர்ந்து தொழில் செய்வதற்கும் அவர்களின் வரலாறு பற்றி தெரிந்து கொள்வதற்கும் வீடுநிலம் வாகனம் பற்றி கூறியுள்ளதில் பிரிவு 3 ல் கூறியுள்ளபடி 10 ஆமிடத்தை லக்கினமாக வைத்துப் பார்க்க வேண்டும்.

## 59. யாருடைய ஆதரவில் குழந்தைகள் வளர்ந்து வருவார்கள் என்பது பற்றிய விபரம்.

லக்கினத்திற்கு 9 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர்கள் சேர்ந்திருந்தாலும் 9 க்கு 11 க்குடையவர் 9 க்கு 3 லிருந்தாலும் 3 ஆமிடத்தைப்பார்த்தாலும் தந்தையின் சகோதரன் சகோதரி வழியிலும் லக்கினத்திற்கு 4-11 க்குடையவர்கள் பரிவர்த்தனை சேர்க்கையிருந்தாலும் 4 ல் 11 க்குடையவர் நின்றாலும் 4 ஆமிடத் தையும் 4 க்குடையவரையும் 11 க்குடையவர் பார்த்தாலும் தாய் பிறந்த வீட்டிலும் 4 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர்கள் மேற்கூறிய படியிருந்தால் தாயின் சகோதரி வீட்டிலும் லக்கினத்திற்கு 3-11 க்குடையவர்கள் மேற்கூறியபடியிருந்தால் சகோதரன் சகோதரி வீட்டிலும் வளர்ந்து வருவார்கள். இது சுவீகாரம் போகிறவர்களுக்கும் உத்தியாகம் காரணமாக தாய் தந்தை வெளிநாட்டில் வெளி மாநிலங்களில் இருப்பவர்களின் குழந்தைகளுக்கும் தாய் தந்தை பிரிந்து வாழ்பவர்களுக்கும் பெற்றோர்களில் ஒருவரையோ அல்லது இருவரையும் இழந்த குழந்தைகளுக்கும் இந்த அமைப்பு பொருந்தும்.

## 60. குழந்தையில்லாமல் சுவீகாரம் எடுத்து கொள்ளும் குழந்தைகளின் விபரம்.

ஆண் சாதகத்தில் லக்கினத்திற்கு 3-11 க்குடையவர்கள் பரிவர்த்தனையடைந்திருநதாலும் இருவரும் சேர்ந்திருந்தாலும் 11 க்குடையவர் 3 ஆமிடத்தையோ 3 க்குடையவரையோ பார்த்தாலும் 3 லிருந்தாலும் தனது சகோதரன் அல்லது சகோதரி வர்க்கத்தில் சுவீகாரம் எடுக்கலாம். மனைவியின் சாதகத்தில் 7 ஆமிடத்திற்கு 3-11க்குடையவர்கள் 7 ஆமிடத்திற்கு மேலே கூறியபடி கிரக நிலையிருந்தாலும் கணவரின சகோதர வர்க்கத்தில் சுவீகாரம் எடுக்கலாம். இந்த 2 அமைப்பும் இல்லாதிருந்தால் ஆண் சாதகத்தில் மனைவி ஸ்தானததிற்கு 3-11 க்குடையவர்கள் 7 ஆமிடத்திற்கு 3-11 க்குடையவர்கள் மேலே கூறியுள்ளபடி கிரக நிலையிருந்தாலும் மனைவி. சாதகத்தில் லக்கினததிற்கு 3-11 க்குடையவர்கள் மேலே கூறியுள்ளபடி கிரக நிலையிருந்தால் மனைவியின் சகோதரன் அல்லது சகோதரி வர்க்கத்தில் சுவீகாரம் எடுக்கலாம். இந்த இரு வர்க்கத்திலும் சுவீகாரம் எடுக்கும் குழந்தைகளின் சாதகத்தில் யாருடைய ஆதரவில் குழந்தைகள் வருவார்கள் என்று கூறியுள்ள படி கிரக அமைப்புகள் எந்தக் குழந்தையின் சாதகத்தில் உள்ளதோ அந்தக் குழந்தையை சுவீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

## 61. பூர்வபுண்ணியஸ்தானம்.

5 ஆமிடம் பூர்வபுண்ணியஸ்தானமாகும். 5க்குடையவர் 1-2-4-5-7-9-10-11 ல் நின்றால் பூர்வீக சொத்துக்கு அழிவு உண்டாகாது. மேற்கூறியபடி கிரகநிலையிருந்து 5 ஆமிடத்திற்கு 10 ஆம் வீட்டதிபதி குரு வீட்டிலிருந்தாலும் அந்த வீட்டை குரு பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் மூதாதையர்கள் பெரும் செல்வந்தர் களாக இருந்திருப்பார்கள். மேற்கூறிய படி கிரக நிலையிருந்து 5 ல் ராகு அல்லது கேது நின்றாலும் அல்லது 5 க்குடையவரோடு கூடி நின்றாலும் பூர்வீக சொத்துகளில் வம்புவழக்கு வந்து ஜெயித்திருப்பார்கள். 5 க்குடையவர் 6-8-12 ல் நின்று 11 க்குடையவர்

சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் 11 க்குடையவர் 5லிருந்தாலும் பார்த்தாலும் பூர்வீக சொத்துகளிருக்கும். அதை மாற்றிவேறு இடத்தில் வாங்கியிருப்பார்கள். அல்லது பூர்வீக சொத்துக்களை வேறு ஒருவர் நிர்வாகத்தில் விட்டு விட்டு வெளியூரில் வாசம் செய்வார்கள். இல்லையேல் சகோதரபாகம் பிரிவு 9 ல் கூறிய படி கிரக நிலையிருந்தால் சகோதரன் சகோதரி வர்க்கத் தார்கள் அனுபவித்து வருவார்கள். மேற்கூறிய படி கிரகநிலையிருந்து 5 ல் ராகு அல்லது கேது நின்று சகோதர பாகம் பிரிவு 8 ல் கூறியுள்ள படி கிரக நிலையிருந்தால் தனது சகோதரன் சகோதரி வகையில் வம்பு வழக்கு வந்து தமக்கு ஒரு தொகையைக் கொடுத்து விட்டு அவர்கள் அனுபவித்து வருவார்கள். இல்லையேல் தந்தை ஸ்தானத்திற்கு, சகோதர தோஷமிருந்தால் தந்தை வழி சகோதரங் களாலும், பாட்டன்ஸ்தானத்திற்கு சகோதர தோஷமிருந்தால் பாட்டனின் சகோதரங்களாலும் வம்பு வழக்கு வந்து ஜெயித்திருப்பார். 5 க்குடையவர் 6-8-12ல் 11 க்குடையவர் சேர்க்கை பார்வை இல்லா திருந்தால் பூர்வீக சொத்துக்களை விற்று விடுவார். இந்த அமைப் போடு 5 ல் ராகு கேது நின்றால் பூர்வீகச் சொத்துக்களிருக்காது.

## 62. 7 1/2 சனி விபரம்

கோட்சாரப்படி சந்திரன் நின்ற ராசிக்கு 12 ல் சனி வரும் போது பாதச்சனி என்றும் சந்திரன் நின்ற ராசிக்கு வரும் போது சென்மச்சனி என்றும் சந்திரன் நின்ற ராசிக்கு 2 ஆமிடத்திற்கு சனி வரும் போது குடும்பச்சனி என்றும் இந்த 3 ராசிகளிலும் சஞ்சாரம் செய்யும் காலத்தை 7 1/2 ச்சனி என்றும் சந்திரனுக்கு 8 ஆமிடத்தில் சஞ்சாரம் செய்யும் காலத்தை அஷ்ட்டமச்சனி என்றும் கூறுவார்கள். 7 1/2 ச்சனி 7 1/2 வருஷத்திற்கு நடந்து வரும் என்று பொதுவாகக் கூறுவார்கள். சனி துலாம் ராசி முதல் கும்ப ராசி வரை சஞ்சாரம் செய்யும் போது அதிக வக்கிரம் உண்டாவதால் ஒவ்வொரு ராசியிலும் 3வருட காலத்திற்கும் மீன ராசி முதல் கன்னியா ராசி வரை 2வருடம் 2 அல்லது 3 மாத காலம் வரை சஞ்சாரம் செய்வார். ஆதலால் சில ராசிக்காரர்களுக்கு 9 வருடமும் சில ராசிக்காரர்களுக்கு 61/2

வருடமும் 7 வருடமும் 7 1/2ச் சனியின் காலம் வரும். பொதுவாக 7 1/2 ச்சனி அஷ்டட்டமச்சனி நடந்து வரும் காலத்தில் உத்தியோகத்திலிருப்பவர்களுக்கு இடமாற்றம் இலாக்கா மாற்றமும் உண்டாகும். வியாபாரிகளுக்கும் தொழில் அதிபர்களுக்கும் அடியாட்கள் கூட்டாளி மாற்றமுண்டாகும். யோக மான திசைபுத்திகள் நடந்து வருபவர்களுக்கு தொழில் பாகத்தில் எவ்வித பாதிப்பும் உண்டாகாது. 6-8-12 க்குடையவர்களின் திசை நடந்து வருபவர்களுக்கு புத்தி நாதர்கள் 4க்கும் 4க்குடையவருக்கும் 10க்கும் 10 க்குடையவருக்கும் 6-8 ல் நின்றாலும் அதிக துன்பத்தைக் கொடுக்கும். இதைப்போலவே சகடயோக திசை நடந்து வருபவர்களுக்கு புத்தி நாதர்கள் மேற்கூறிய படியிருந்தாலும் அதிக துன்பத்தைக் கொடுக்கும். இந்தக் காலங்களில் வெளியூர் அல்லது வெளி மாநிலங்களுக்குச் சென்று தொழில் செய்து வந்தால் அதிக பாதிப்பைக் கொடுப்பதில்லை. நல்ல பலனையே கொடுத்து வருகிறது. 8க்குடையவர் திசை சனி திசை ராகு திசை கேது திசை நடந்து வருபவர்களுக்கு 10 க்குடையவர் 6-8-12 ல் நின்றால் வெளிநாடு சென்று நிரந்தரமாக இருந்து வருகிறார்கள். 7 1/2 ச்சனி பாதிப்பைக் கொடுப்பதில்லை, மற்ற திசை நடந்து வருபவர்களுக்கு 7 1/2 ச்சனி முடியும் வரை வெளியூர் அல்லது வெளிநாட்டில் இருந்து விட்டு சொந்த ஊருக்கே வந்து விடுகிறார்கள். மேற்கூறிய படி இடமாற்றம் செய்து கொள்பவர்களுக்கு 7 1/2 ச்சனியும் சகடயோக திசையும் நல்ல பலனையே கொடுத்து வருகிறது.

## 63. சகடயோகதிசை

குரு நின்ற ராசிக்கு 6-8-12 ல் சந்திரன் நின்றால் சகடயோகமாகும். சகடயோக திசையில் அதிக துன்பத்தைக் கொடுக்கும் என்றும் சக்கரம் சுழலுவது போல் பொருளாதார பாகத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருந்து கொண்டேதானிருக்கும் என்று நூல் கூறுகிறது. ஆயினும் குரு 4-10 ஆமிடத்திற்கும் 4-10 க் குடையவருக்கும் 6-8 ஆமிடம் தவிர வேறு இடங்களில் நின்றால் அதிக பாதிப்பு உண்டாகாது.

## 64. ஆங்கில எண் கணித சாஸ்த்திரம்

ஆங்கில எழுத்துகளுக்குறிய எண்கள்

| A | B | C | D | E | F | G | H | I | J | K | L | M |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | 2 | 3 | 4 | 5 | 8 | 3 | 5 | 1 | 1 | 2 | 3 | 4 |
| N | O | P | Q | R | S | T | U | V | W | X | Y | Z |
| 5 | 7 | 8 | 1 | 2 | 3 | 4 | 6 | 6 | 6 | 5 | 1 | 7 |

**1 எண் சூரியன்**

1-10-19-28 தேதிகளில் பிறந்தவர்கள் 1 எண்ணுக்குறியவர் களாகவார்கள். அதிர்ஷ்ட எண் 1-4 தேதிகள் 1-4-10-13-19-22-28-31 ஆகாத எண் 8 தேதிகள் 8-17-26 அதிர்ஷ்ட ரத்தினம் மாணிக்கக்கல்.

**2 எண் சந்திரன்**

2-11-20-29 தேதிகளில் பிறந்தவர்கள் 2 எண்ணுக் குறியவர்களாவார்கள். அதிர்ஷ்ட எண் 1-2-7 தேதிகள் 1-2-7-10-11-16-19-20-25-28-29 ஆகாத எண் 8-9 தேதிகள் 8-9-17-18-26-27 அதிர்ஷ்ட ரத்தினம் முத்து

**3 எண் குரு**

3-12-21-30 தேதிகளில் பிறந்தவர்கள் 3 எண்ணுக்குறியவர் களாவார்கள். அதிர்ஷ்ட எண் 3-9 தேதிகள் 3-9-12-18-21-27-30 ஆகாத எண் 6-8 தேதிகள் 6-8-15-17-24-26 அதிர்ஷ்ட ரத்தினம் புஸ்பராகம்.

**4 எண் ராகு**

4-13-22-31 தேதிகளில் பிறந்தவர்கள் 4 எண்ணுக்குறிய்வர் களாவார்கள். அதிர்ஷ்ட. எண் 1-4 தேதிகள். 1-4-10-13-19-22-28-31 ஆகாத எண் 7-8 தேதிகள் 7-8-16-17-25-26 அதிர்ஷ்ட ரத்தினம் கோமேதகம்.

5 எண் புதன்

5-14-23 தேதிகளில் பிறந்தவர்கள் 5 எண்ணுக் குறியவர்களாவர்கள். அதிர்ஷ்ட எண் 5-9 தேதிகள் 5-9-14-18-23-27 ஆகாத எண் தேதிகள் எதுவுமில்லை. அதிர்ஷ்ட ரத்தினம் மரகதம்.

6 எண் சுக்கிரன்

6-15-24 தேதிகளில் பிறந்தவர்கள் 6 எண்ணுக் குறியவர்களாவார்கள். அதிர்ஷ்ட எண் 6-9 தேதிகள் 6-9-15-18-24-27 ஆகாதஎண் 3-8 தேதிகள் 3-8-12-17-21-26-30 அதிர்ஷ்ட ரத்தினம் வைரம்.

7 எண் கேது

7-16-25 தேதிகளில் பிறந்தவர்கள் 7 எண்ணுக்குறியவர் களாவார்கள். அதிர்ஷ்ட எண் 1-2-7 தேதிகள் 1-2-7-10-11-16-19-20-25-28-29 ஆகாதஎண் 8 தேதிகள் 8-17-26 அதிர்ஷ்ட ரத்தினம் வைடூரியம்

8 எண் சனி

8-17-26 தேதிகளில் பிறந்தவர்கள் 8 எண்ணுக்குறியவர் க்ளாவார்கள். அதிர்ஷ்ட எ்ண் 5-8-9 தேதிகள் 5-8-9-14-17-18-23-26-27 ஆகாத எண் 3-6 தேதிகள் 3-6-12-15-21-24-30 அதிர்ஷ்ட ரத்தினம் நீலம்.

9 எண் செவ்வாய்

9-18-27 தேதிகளில் பிறந்தவர்களின் 9 எண்ணுக்குறியவர் களாவார்கள் அதிர்ஷ்ட எண் 3-6-9 தேதிகள் 3-6-9-12-15-18-21 24-27-30 ஆகாத எண் 2 தேதிகள் 2-11-20-29 அதிர்ஷ்டரத்தினம் பவழம்

பெயர் எண்

பெயரை ஆங்கிலத்தில் எழுதி இனிஷியலையும் போட்டு அவற்றிற்குறிய எண்களைப்போட்டு கூட்டி வந்தத் தொகையை ஒரு

ஸ்தானத்திற்கு வரும் வரைக் கூட்டி வந்து பெயர் எண்ணைக் காண வேண்டும். உதாரணமாக ஒருவர் பெயர் V.பரமசிவம் என்றால்

| V. | P | A | R | A | M | A | S | I | V | A | M | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 6 | 8 | 1 | 2 | 1 | 4 | 1 | 3 | 1 | 6 | 1 | 4 | 38 |

3+8=11 1+1=2 பெயர் எண் 2 ஆகும். இதைப் போலவே வியாபார விலாசமும் வீட்டின் பெயரும் வாகனங்களின் நேம் போர்டும் நம்பர் பிளேட்டில் உள்ள ஆங்கில எழுத்துகளுக்குறிய எண்களைப் போட்டு மற்றும் உள்ள எண்களையும் சேர்த்து கூட்டி வந்த எண் அவரவர்கள் பிறந்த எண்ணுக்கும் கூட்டு எண்ணுக்கும் அதிர்ஷ்டமான எண்ணாக வர வேண்டும். அந்த அதிர்ஷ்டமான எண்ணுக்குறிய கிரகம் அவர்களின் சாதகத்தில் 3-6-8-12 க்குடைய வராக இருந்தால் அது நன்மையைத் தராது. 1-2-4-5-7-9-10-11 க் குடையவராக இருந்து ஆட்சி உச்சம் நட்பு வீடுகளில் மேற்கூறிய சுபஸ்தானங்களில் நின்றால் அந்தக் கிரகத்திற்குறிய எண்களில் பெயர் வைக்கலாம். பிறந்த எண்ணுக்கும் கூட்டு எண்ணுக்கும் ஆகாத எண்கள் தவிர மற்ற எண்களுக்குறிய கிரகங்கள் 1-2-4-5-7-9-10-11 க்குடையவராக இருந்து ஆட்சி உச்சம் நட்பு வீடுகளில் நின்றால் அந்தக் கிரகத்திற்குறிய எண்களிலும் குழந்தைகளுக்கு பெயர் வைக்கலாம் மற்றும் வியாபார விலாசம் வண்டியின் விலாசம் நம்பர் பிளேட்டின் கூட்டு எண் தொழிலுக்கு சேரும் கூட்டாளியின் பிறந்த எண், விலாசம், செய்து கொள்ளும் ஆண்பெண் இருவர் பிறந்த எண் விவாக தினத்தின் தேதி கூட்டு எண் தொழில் ஆரம்பிக்கும் தேதி கூட்டு எண் யாவும் அவரவர்கள் பிறந்த தேதிக்குறிய அதிர்ஷ்ட எண்களுக்குறிய கிரகங்களும் ஆகாத எண்களுக்குறிய கிரகங்கள் அல்லாத வேறு கிரகங்கள் அவரவர்கள் சாதகத்தில் மேலே கூறியுள்ள படி கிரகங்கள் இருந்தால் அந்தக் கிரகத்திற்குறிய தேதி கூட்டு எண் வரும் நாட்களிலும் மேற்கூறிய

காரியங்களைச் செய்யலாம். சாதகப்படி திருமணப்பொருத்தம் கூட்டாளி பொருத்தம் இல்லாமலிருந்தால் எண் கணிதப்படி பொருத்தம் உள்ளது என்று விவாகம் செய்யவோ கூட்டு சேர்க்கவோ கூடாது. கிரகப் பொருத்தம் தான் முக்கியமானதாகும்.

## 65. குழந்தைகளின் சாதகப்படி நடந்த சில சம்பவங்கள்

சாதகன் ஜனனம் 30-8-1987 விசாக நட்சத்திரம் ரிஷபலக்கினம் 4ல் சூரியன் செவ்வாய் புதன் சுக்கிரன் 5ல் கேது 6ல் சந்திரன் 7ல் சனி 11ல் ராகு 12ல் குரு இந்த சாதகத்தைக் கொடுத்து அய்யா இது என் மகன் சாதகம். என் மனைவியுடன் பிறந்தது யாருமில்லை என் மனைவி மட்டும் தான் என் மாமியாருடன் பிறந்தது. ஒரு அக்காள் மட்டும் தான் வேறு சகோதரங்கள் இல்லை. அதற்கு 2மகன்கள் இருக்கிறார்கள். என் மாமியாருக்கு ஆண் வாரிசு இல்லை என்ற காரணத்தால் என் மாமியாரின் அப்பா அம்மா இருவரும் பூர்வீகச் சொத்துக்களை என் மாமியாருக்கு அந்தச் சொத்துகளில் எந்த வித பாத்தியதையும் கிடையாது என்றும் என் மாமியாருக்கு உண்டாகும் வாரிசுகளுக்கும்பாத்தியதை கிடையாது என்றும் என் பெரிய மாமியாரின் மகன்களின் பெயரில் உயில் எழுதி வைத்து விட்டு இருவரும் இறந்து விட்டாகள். தற்போது என் மாமியார் அந்தச் சொத்தில் சம பங்கு வேண்டும் என்று வழக்குப் போட்டு கேஸ் நடந்து வருகிறது. அந்தச் சொத்து என் மாமியாருக்குக் கிடைக்குமா என்று கேட்டார். சாதகத்தில் 4க்கு 4ஆம் வீட்டதிபதியும் 4க்கு 11ஆம் வீட்டதிபதியுமான செவ்வாயும் புதனும் கூடி நிற்பதால் தாய்க்கு தாய் பிறந்த வீட்டு சொத்து கிடைக்கும் என்ற அமைப்பும் 12க்கு 7ஆம் வீட்டதிபதி சுக்கிரனை 12க்கு 11ஆம் வீட்டதிபதி சனி பார்ப்பதால் தாய்ப்பாட்டனுக்கு மனைவி வழி சொத்து கிடைக்கும் என்ற அமைப்பும் தாய் பாட்டிக்குறிய பங்கை தனது சகோதரி அனுபவிக்கவும் அமைப்பில்லாததால் நிச்சயமாக அந்தச் சொத்து உன் மாமியாருக்குக் கிடைக்கும் என்று கூறினேன். அதன் படியே வாதியின் பாட்டன் பெயரில் உள்ளச் சொத்துக்களை வாதியின் தாய்

தந்தை வாதியின் சம்மதமில்லாமல் வேறு நபருக்கு விற்கவோ எழுதி வைக்கவோ உரிமையில்லை. ஆதலால் வாதிக்கு சம பங்கு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பானது. பிறகு அவர்களிடமே தனது பங்குக்குறிய தொகையைப் பெற்றுக் கொண்டு கிரயம் எழுதி கொடுத்து விட்டார்கள். சாதகி ஜனனம் 28-8-1985 திருவோண நட்சத்திரம் கும்பலக்கினம் 3ல் ராகு 6ல் செவ்வாய் புதன் சுக்கிரன் 7 ல் சூரியன் 9 ல் சனி கேது 12 ல் சந்திரன் குரு இந்த சாதகத்தைக் கொடுத்து அய்யா இது என் மகள் சாதகம் இந்தப் பெண் 7 மாத கர்ப்பமாக இருந்த போது வளைகாப்பு நடந்த அன்று இரு குடும்பத்தாருக்கும் சச்சரவு உண்டாகி வளைகாப்பு நடத்தாமலே கூட்டிக் கொண்டு போய் விட்டார்கள். பிறகு அவர்கள்செய்த சீர் வரிசைகளை கேட்டார்கள். எல்லாவற்றையும் கொடுத்து விட்டு விடுதலை கேட்டோம். அவர் விடுதலையும் கொடுக்க மாட்டேன் வேறு கலியாணமும் செய்ய விட மாட்டேன். வேறு கலியாணம் செய்தால் எல்லோரையும் கம்பி எண்ண வைத்து விடுவேன் என்று சவால் விட்டார் நாங்களும் பத்திரிக்கை அடித்து பந்தல் போட்டு ஊரறிய கலியாணம் செய்து காட்டுகிறோம் என்று சவால் விட்டிருக்கிறோம். அது நிறைவேறுமா என்று கேட்டார். இந்த சாதகப்படி 3ல் ராகு 3க்குடைய செவ்வாய் 6ல் நீசமடைந்துள்ளதால் இளைய சகோதரமிருக்க வாய்ப்பில்லை 9 ல் சனி கேது 9 க்கு 7 ல் ராகு. அவ்வீட்டதிபதி செவ்வாய் நீசமடைந்துள்ளதால் தந்தைக்கு 2 ஆம் தாரம் உண்டாகும். கேஸ் போட்டாலும் உங்களுக்குச் சாதகமாகத்தான் தீர்ப்பாகும். 4 ஆமிடத்தையும் 4 க்குடைய சுக்கிரனையும் லாபாதிபதி குரு பார்ப்பதால் இந்த சாதகியும் தாயும் தாய் பிறந்த வீட்டில் தான் இருக்கும் என்ற அமைப்பும் உள்ளதால் எப்படியோ உங்களுக்கு 2 ஆம் தாரம் அமையும். சட்டப்பிரச்சினை இருப்பதால் ஊரறிய நடக்கும் என்று என்னால் கூற முடியாது என்று கூறி விட்டேன். பிறகு, அவர் ஒரு பெண்ணைப் பார்த்து பெண் வீட்டாரிடம் ஒரு தொகையைக் கொடுத்து என் தம்பிக்குக் கலியாணம் என்று தான் பத்திரிக்கை அடிப்போம். நான் தான் தாலி

கட்டுவேன் என்று பெண் வீட்டாரின் சம்மதம் பெற்று ஊரறிய கலியாணத்தை நடத்திக் காட்டி விட்டார். பிறகு அவர்கள் கேஸ் போட்டார்கள். அந்தப் பெண் அவர் தம்பிதான் எனக்குத் தாலி கட்டினார். அவர் தான் எனது கணவர் என்று சொல்லி விட்டது. புரோகிதரும் அவர் தம்பியிடம் தான் தாலியை எடுத்துக் கொடுத்தேன். அவர் தான் அந்தப் பெண்ணுக்குத் தாலி கட்டினார் என்று சாட்சி சொன்னதால் கேஸ் தள்ளுபடியாகி விட்டது.

ஜாதகன் ஜனனம் 9-6-1976 சுவாதி நட்சத்திரம் கன்னியா லக்கினம் 2 ல் சந்திரன் ராகு 8 ல் குரு கேது 9 ல் சூரியன் புதன் சுக்கிரன். 11ல் செவ்வாய் சனி இந்த சாதகத்தைக் கொடுத்து அய்யா எனக்கு அண்ணன் 2பேர் தம்பி இல்லை. எல்லோரும் இலங்கையில் தான் இருக்கிறோம். எல்லோரும் இந்தியாவுக்கு வருவதாக முடிவு செய்து இந்தியாவிற்குப் போய் ஒரு தோட்டம் வாங்கி 3 வீடு கட்டிவை என்று என்னிடம் பணத்தைக் கொடுத்து என் குடும்பத்தை மட்டும் அனுப்பி வைத்தார்கள். நிலம் வாங்க நேரம் இருக்கிறதா என்று பார்க்க வந்தேன் என்றார். இந்த சாதகப் படி தற்போது நிலம் வாங்கக்கூடிய அமைப்பு உள்ளது. நிலத்தை யார் பெயருக்கு எழுதுகிறீர்கள் என்று கேட்டேன். என் பெரிய அண்ணன் பெயரில் தான் எழுதவேண்டும் என்று கூறினார். உங்கள் மகன் சாதகப்படி 9 க்கு 11 ஆம் வீட்டதிபதிக்கு கேதுவோடு கூடி 9 க்கு 12 ல் மறைந்து நின்று 9 க்கு 3 ஆம் வீட்டதிபதி சந்திரனைப் பார்ப்பதால் தந்தைக்கு மூத்த சகோதர பகை உண்டாகும் என்றும் ஒருவர் பங்கை ஒருவர் அபகரித்துக் கொள்வார் என்று கிரக அமைப்பு உள்ளதால் வாங்கும் நிலத்தை 3 பாகமாகப் பிரித்து அவரவர்கள் பாகத்தை அவரவர்கள் பெயரில் எழுதி மோட்டாரில் மூவருக்கும் கூட்டு உண்டு என்று எழுதி ரிஸிஸ்டர் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னேன். அதற்கு அவர் எங்களுக்குள் இதுவரை சண்டையே வந்ததில்லை. நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களே என்று சொன்னார். கிரக நிலைப்படி சகோதரப் பகை இருந்தாலும் இலங்கை மண்ணுக்கு சகோதரப் பகையே வராது. இந்திய மண்ணுக்கு கண்டிப்பாய் சகோதரப்பகை வந்துவிடும்.

அதனால் நான் சொன்னேன் என்று கூறி அனுப்பி விட்டேன். பிறகு அவர் நிலத்தைப் பேசி முடித்து எழுத்துக் கூலிக்கு 30ஆயிரம் பணம் இல்லாமல் தன் மனைவியின் நகையைக் கேட்டிருக்கிறார். அது என் பெயருக்கு எழுதி வைத்தால் தான் நகையைக் கொடுப்பேன் என்று கூறியிருக்கிறது சரி என்று நகையை விற்று மனைவி பெயருக்கே எழுதி வைத்து விட்டார் பிறகு ஒருவருடம் சென்று அண்ணன் குடும்பங்களும் இந்தியாவுக்கு வந்து 3 மாதம் வரை ஒன்றாகவே இருந்தார்கள். பிறகு ஒருவருக்கொருவர் சண்டை வந்து உன் பணம் 30ஆயிரத்தையும் கொடுத்து விடுகிறோம். எங்கள் பாகத்தை எழுதிக் கொடுத்து விடு என்று கேட்டிருக்கிறார்கள். கொடுக்க முடியாது என்று கூறிவிட்டார். பிறகு இருவரும் சேர்ந்து இந்த நிலம் பொதுப்பணத்தில் தான் வாங்கியது அவர் பணம் 30 ஆயிரத்தையும் கொடுத்து விடுகிறோம். எங்களுக்குறிய பாகம் வேண்டும் என்று கேஸ் போட்டார்கள். அவர் நான் ஒருவருடத்திற்கு முன்பே என்னுடைய பாகத்தை மட்டும் பிரித்துக் கொண்டு இந்தியாவுக்கு வந்து என் மனைவியின் நகையை விற்று இவர்கள் பங்கு கேட்பார்கள் என்று தான் என் மனைவி பெயரில் எழுதி விட்டேன் என்று வாதாடியிருக்கிறார். தீர்ப்பும் இவருக்குச் சாதகமாகவே கூறி விட்டார்கள். தந்தை ஸ்தானத்திற்கு சகோதர தோஷம் உள்ளவர்களுக்குத்தான் மேற்கூறிய பலன் நடக்கும். 9க்கு 3-11 க்குடையவர் 9க்கு 6-8-12 ல் இல்லாமல் வேறு இடங்களில் நின்று இருவரும் கூடி நின்றாலும் 9 க்கு 11 க்குடையவர் 9க்கு 3 ல் நின்றாலும் அவ்வீட்டையோ அவ்வீட்டதிபதியையோ பார்த்தாலும் தந்தை வழி சகோதர பங்கை கிரயத்திற்கு வாங்கிக் கொள்ளவோ அவர்களிடம் விற்றுவிடவோ அமைப்பு உண்டாகும் பகை உண்டாகாது.

## 66. முடிவுரை

தேசகால நிருபேனேவயோவர்ணாநுஸாரத
ஜாதஸ்யபலம் ப்ருயோத் கோசரஸ்யாநு ரோதத

மேற்படி பாடலில் தேசம் காலம் சாதிகள் அவர்களின் சமூகப் பழக்க வழக்கங்களை அனுசரித்து தான் பலன் கூற வேண்டும் என்று கூறுகிறது. ஆதலால் அந்தந்த தேசங்களில் வாழ்ந்து வருபவர்களின் சமூகப் பழக்க வழக்கங்களையும் அவர்களுக்கு அரசாங்கம் அளிக்குசலுகைகளையும் அந்தந்தக் காலங்களில் அரசாங்கம் இயற்றும் சட்ட திட்டங்களையும் அனுசரித்துதான் சகோதர பாகத்தையும் காந்தர்வ மணம் பற்றியும் உத்தியோகம் அமைவது பற்றியும் ஆராய்ந்து தான் பலன் கூற வேண்டும். சிலது காலம் பணத்தைச் சம்பாதிக்க வேண்டும். பிறகு பணம் பணத்தைச் சம்பாதிக்கும் என்று கூறுவது போல யோக திசை நடக்கும் போது சிக்கனமாகச் சேமித்து வைத்துக் கொள்பவர்களுக்கு அடுத்து வரும் திசை அவயோக திசையாக வந்தாலும் 7½ சனி சகடயோக திசை வந்தாலும் அதிகமான பாதிப்பு உண்டாவதில்லை. வசதி படைத்தவர்களுக்கு எந்த திசை நடந்து வந்தாலும் அவர்களுக்கு சாதகமான பலனையே கிரகங்களும் கொடுத்து வருவதை அனுபவத்தில் பார்த்திருக்கிறேன். அவரவர்[illegible]ன் தகுதியையும் செல்வாக்கையும் அறிந்து தான் பலன் கூற வேண்

சுபம்

